June 2

' இது தான் இஸ்லாம்' என்கிற மூல நூல் வந்து 90 ஆண்டுகள் ஆகப்போகிறது. Risala E Deeniyat என்று மௌலானா மௌதூதி அவர்கள் உருது மொழியில் எழுதிய நூல். 1952ல் தமிழாக்கம் பெற்றது. பாகிஸ்தான், இந்தியா இஸ்லாமிய பள்ளிகளில் பாடப்புத்தகமாகவும் வைக்கப்பட்ட ஒன்று. இந்திய மொழிகள் பலவற்றில் மொழியாக்கம் பெறப்பட்ட நூல்.

பேரா குர்ஷித் அஹ்மத் அவர்கள், அடிக்குறிப்புகளுடன் 1970 ல் மேம்படுத்தப்பட்ட நூல். மஹதி அவர்கள் மொழிபெயர்ப்பில் 2017 பதிப்பை படிக்க வாய்ப்பு கிடைத்தது. மௌலான மௌதூதி அவர்கள் 60க்கும் மேற்பட்ட நூல்களை எழுதிய அறிஞர் என இஸ்லாமிய டிரஸ்ட் நிறுவனத்தார் தெரிவிக்கின்றனர்.

" இஸ்லாமிய வாழ்க்கைத்திட்டம், வணக்கமுறை, பிரார்த்தனை தத்துவம், ஈமானின் அம்சங்கள், வாழ்க்கை அணுகுமுறை ஆகியவற்றை எளிமையாக படம் பிடித்துக்காட்டும் நூல்" என்கின்றனர்.

அவரவர் மத அனுசரிப்புகள் அந்தந்த மதத்தினருக்கு முக்கியமானவை. புண்படுத்தாமல் இருப்போமாக.

இனி நூலில் பேசப்பட்டுள்ள சில அம்சங்கள்..

" இஸ்லாம் ஒரு குறிப்பிட்ட மனிதருடனோ, தனி சமுதாயத்துடனோ தொடர்பு கொண்டதாயில்லை. அதன் பெயரே குறிப்பிட்ட அம்சத்தையும், சிறப்பையும் வெளிப்படுத்துகிறது..இந்த மதம் மனிதரால் தோற்றுவிக்கப்பட்டதல்ல. குறிப்பிட்ட சமுதாயம், நாடு என்கிற வரையறைகள் இல்லை. ஒவ்வொரு காலத்திலும் வாய்மையும் நேர்மையும்வாய்ந்த பண்புள்ளமக்கள் அனைவரும் முஸ்லீம்களாய் இருக்கிறார்கள். இருப்பார்கள்"

" இறைவனுக்கு முற்றிலும் கீழ்ப்படிந்து அவனுடைய ஆணைகளை நிறைவேற்றுவதற்கே இஸ்லாம் என்ற பெயராகும்"

குர்ஷித் அஹ்மது அடிக்குறிப்பு : இஸ்லாம் என்பதற்கு மற்றொரு பொருள் சாந்தி என்பதாகும். இறைவனுக்கு அர்ப்பணித்து கீழ்ப்படிந்து நடப்பதன் மூலம் சாந்தியை பெறுதல்

“ இறை நிராகரிப்பு ஓர் அறியாமையாகும். மூல அறியாமையே அதுதான்.. இறை நிராகரிப்பு ஒரு கொடுமையாகும். அது இறைவனுக்கு எதிராகப் புரட்சி, நன்றி கொல்லல், இரண்டகம் செய்தல் ஆகும்”

“ எந்த அறிவு தன்னைப் படைத்தவனையே அறிந்துகொள்ளவில்லையோ அந்த அறிவு எப்பொருளைத்தான் சரியானது என அறிந்துகொள்ளப் போகிறது. புத்தி கோணல்வழியில்தான் செல்லும்”

“ என் எஜமானனாகிய இறைவன் , என் சக்தியையும் அறிவையும் எவ்வளவு அதிகப்படுத்தி இருக்கிறானோ அதைக்கொண்டு என்னுடைய நன்மைக்காகவும், எல்லா மக்களுடைய நன்மைக்காகவும் பாடுபடுவேன் என்கிற உறுதி மேற்கொள்வது செயலாற்றுவதே இறைவனுக்கு செலுத்தும் நன்றியாகும்”

“ ஒரு முஸ்லீம் எவ்வாறு வாழவேண்டும் என்பதை நன்கு புரிந்து ஒரு போதும் அவன் உலகில் இழிவுபடுத்தப்பட்டவனாகவோ, தாழ்த்தப்பட்டவனாகவோ, அடிமைப்பட்டவனாகவோ இருக்க முடியாது. அவன் எப்போதும் மேலாதிக்கம் செலுத்துபவனாயும் ஆணையிடுபவனாயுமே இருப்பான் என்கிற நம்பிக்கை ஏற்படும்”

“ இறைவன் ஒருவனே, அவனுடைய இறைமையில் அவனுக்கு இணை, துணை யாருமில்லை”

“ நம்பிக்கை ( ஈமான்) இல்லாமல் எந்த மனிதனும் முஸ்லீம் ஆகமுடியாது..எங்கு நம்பிக்கை இல்லையோ அங்கு இறைநிராகரிப்பு ( குப்ரு) இருக்கும். அதற்கு மற்றொரு பொருள் இறைவனுக்கு எதிரான புரட்சியாகும்”

“ இறைத்தூதர்களைத் தவிர வேறு எவர் மூலமாகவும் உங்களுக்கு சரியான விஷய ஞானம் கிடைக்காது. சரியான ஞானமின்றி இஸ்லாமிய வழிமுறையில் நடக்க முடியாது”

“ ஒருவரை இறைத்தூதர் என்று ஒப்புக்கொண்ட பின்பும் அவர் சொல்லை ஒப்புக் கொள்ளாதிருத்தல் அறிவுடைமையாகாது. அவர் கூறுபன யாவும் இறைவனின் சார்பாகக் கூறப்படுவன. அவர் செய்வன யாவும் இறைவனின் விருப்பப்படி செய்யப்படுவனயாகும்”

“ எந்த விஷயம் இறைவனுக்கு எதிரானதோ அது ஒரு போதும் உண்மையானதாகவோ, சத்தியமானதாகவோ இருக்கமுடியாது”

“ அரபு மொழியை பாருங்கள். அது தேனினும் இனிய மொழி, அதை கேட்கும்போது காதுகளில் தேன் பாய்வதைப் போல இருக்கும். இசைநயம் கேட்போரை

மெய்மறக்கச் செய்யும். குர் ஆன் போன்ற வேத நூலுக்கு இத்தகய மொழியே அவசியமாயிருந்தது"

குர்ஷித் அவர்களின் அடிக்குறிப்பு: " திருக்குர் ஆனும் ஹதீஸூம் இஸ்லாத்தின் நிலையான மாறா அடிப்படைத் தத்துவங்களை விளக்குகின்றன..நிலையான வாழ்க்கை தத்துவங்களுக்கும் அடிப்படை கோட்பாடுகளுக்கும் ஏற்ப, மனித சமுதாய பரிணாமம் நிரந்தரமாக இயங்க ஓர் அமைப்பை ஏற்படுத்திய ஒரே மதம் இஸ்லாம்தான்.

" காபிர் இறை மறுப்பாளன், முஷ்ரிக் இறைவனுக்கு இணை வைப்பவன், நாத்திகன் ஆகியோரிலிருந்து ஒரு முஸ்லீமை வேறுபடுத்துகிற கலிமா லா இலாஹ இல்லல்லாஹூ- அதாவது அல்லாஹ்வைத் தவிர வணக்கத்துக்கு உரியவன் வேறு எவரும் இல்லை. இந்த கலிமா தான் இஸ்லாத்தின் அடிப்படையாகும்"

" இக்கலிமா மனிதனிடம் தன்னம்பிக்கையுடன் பணிவுடைமையும் உருவாக்குகிறது. உளத்தூய்மை நன்னடத்தை தான் ஈடேற்றம் என்பதை அறிய வைக்கும். .மனத்திருப்தியை ஏக தெய்வக் கொள்கையால் தவிர வேறு எந்த கொள்கையாலும் பெறமுடியாது"

" அல்லாஹூ எனும் சொல் உண்மையில் இணைதுணையற்ற ஏக இறைவனின் பெயராகும்"

" முஹம்மத் ( ஸல்) அவர்கள் இறைவனின் உண்மையான தூதர். அவரது அறிவுரை முற்றிலும் நிறைவு பெற்றது. எல்லாத் தவறுகளிலிருந்தும் தூய்மையாக இருக்கிறது. அவர்கள் இறைவனின் இறுதித் தூதர்"

" அல்லாஹ், ஒவ்வொருவருவருடைய நல்ல கெட்ட செயலையும் நிறுத்துப்பார்ப்பான்.. எவருடைய தீச்செயலின் தட்டு தாழுமோ அவருக்கு தண்டனை அளிப்பான். எவர்கள் மன்னிப்பு பெறுகிறார்களோ அவர்கள் சுவர்க்கம் புகுவர். தண்டனை பெற்றவர் நரகம் செல்வர்"

" ஒரு நாள் அல்லாஹ் முழு உலகையும் , படைப்பினங்களையும் அழித்துவிடுவான். அந்த நாளின்பெயர் கியாமத். பிறகு இறைவன் அனைவருக்கும் மறுவாழ்வு அளிப்பான். அனைவரும் அல்லாஹ் முன் கொண்டுவரப்படுவர். அதற்கு ஹஷர் எனப் பெயர்"

" அய்ந்து விஷயங்களின் மீது நம்பிக்கை

இணை துணையற்ற ஏக இறைவன் அல்லாஹ்

இறைவனுடைய வானவர் மீது

இறுதி வேதம் புனிதக் குர் ஆன் மீது

இறுதி தூதர் முகம்மத் ஸல்லல்லாஹூ அலைஹிவஸல்லம் மீது

மறுமை வாழ்வு மீது"

" இறைவனுக்கு கீழ்ப்படிந்துஅடிமையாகி தொண்டு செய்வது வழிபாடு. நீங்கள் அப்து அடிமை. அல்லாஹ் உங்கள் ம ஆபூத் அரசன்"

" எதன் மீது நாம் ஈமான் நம்பிக்கை கொண்டிருக்கிறோமோ அதனை நாள்தோறும் அய்ந்து முறை சொல்லாலும் செயலாலும் நிறைவு செய்து புதுப்பிக்கின்ற நிரந்தர வழிபாட்டு முறை தொழுகையாகும்"

" அல்லாஹ் தொழுகையை பலருடன் கூடி ஜமாஅத்துடன் தொழும்படியே உத்தரவிட்டிருக்கிறான். ஒருமுறை வெள்ளிக்கிழமை ஜூம் ஆத் தொழுகையை ஜமாஅத்துடன் தொழுவதைக் கடமையாக்கி இருக்கிறான்."

" ரமளான் மாதம் வந்ததும் வைகறை முதல் மாலைவரை உண்ணல், பருகல் அறவே நின்றுவிடுகிறது. அல்லாஹ் குறிப்பிட்ட மாதத்தில் நோன்பைக் கடமையாக்கியிருக்கிறான். அனைவரும் சேர்ந்து நோற்கவேண்டும்"

" ஜகாத் - அல்லாஹ் பணக்காரர்களின் செல்வத்தில் இரண்டரை சதவீதப் பங்கை ஏழைகளுக்கென்று தீர்மானித்திருக்கிறான். இது இஸ்லாத்தின் மிகப்பெரிய தூண். தன்னலம், பொருளாசை தீய குணங்களை விலக்குகிறது. முஸ்லீம்கள் ஒருவருக்கொருவர் உதவி செய்து வாழ்வது. எந்த முஸ்லீமும் நிர்க்கதியாகிவிடக்கூடாது"

" ஹஜ் வாழ்வில் ஒரு முறையாவது நிறைவேற்ற வேண்டியது. புனித மக்கமா வரை போய்வரும் செலவை தாங்கக்கூடியவர் கடமை"

" ஜிஹாத் இஸ்லாமிய ஷரீ அத் மொழியில் இஸ்லாமிற்காக முயன்று உழைப்பது என்பதாகும். இஸ்லாத்தின் பகைவர்களுடன் செய்யும் போருக்கு குறிப்பாக ஜிஹாத் எனும் பெயர் பயன்படுத்தப்பட்டிருக்கிறது"

" தீன் இறை வழிபாட்டில் அல்லாஹ்வைத் தவிர வேறு யாரையும் இணையாக்கக்கூடாது. இந்த ஈமான் , இந்த வழிபாடு தீன் ஆகும். ஷரீஅத் வணக்க முறைகள், வாழ்க்கை விதிகள், பரஸ்பர விவகாரம், தொடர்புகள் பற்றிய சட்டங்கள், ஆகுமானவை ஹலால், ஆகாதவை ஹராம் முதலியவை குறித்தவை ஷரீஅத் எனப்படும்"

" இரண்டு மூலாதாரங்கள் ஒன்று புனித குர்ஆன், இரண்டாவது ஹதீஸ். குர் ஆன் இறைமறையாகும். அதன் ஒவ்வொரு சொல்லும் அல்லாஹ்வுடையதாகும். நபித்

தோழர்களுடன் கேட்ட பல விஷயங்கள் மனப்பாடமாகி, எழுதி வைத்துக்கொண்டவை நூலானது. இவ்விதம் ஹதீஸ் பெரிய கரூவூலம் சேகரிக்கப்பட்டது. குர் ஆன், ஹதீஸ் பற்றி நன்கு அறிந்த மார்க்க அறிஞர்கள் தொகுத்து சொன்னவை ஃபிக்ஹூ ஆகும்"

" ஃபிக்ஹூ வெளிப்படையான செயலுடன் தொடர்புடையது. மனநிலை எப்படி என்று எது கவனிக்கிறதோ அது தஸவ்வுஃப் என்பதாகும்"

" மனித உறவுகளின் தொடக்கம் குடும்பம். குடும்பத்தில் கவனம் செலுத்துங்கள்.இஸ்லாம் வெளியே வேலைகளை ஆண்களிடம் விட்டுள்ளது. அவசியம் இருந்தால் ஒழிய வீட்டைவிட்டு வெளியேற வேண்டாம் என பெண்களுக்கு கட்டளையிட்டுள்ளது. அமைதியாக வீட்டுக்கடமைகளை நிறைவேற்ற வேண்டும்"

" ஓர் ஆண் முழங்காலுக்கும் தொப்புளுக்கும் இடையில் உள்ள பகுதியையும், பெண் முகம் கைகளைத் தவிர உடலின் எப்பகுதியையும் காட்டவே கூடாது. ஷரீஅத் மொழியில் ஸத்ர் எனப்படும்"

" முஸ்லீம்கள் முஸ்லிம் அல்லாதவர்களிடமிருந்து கல்வி, கலை கற்றுக்கொள்ள, பலன் மிக்க வழிகளை அறிந்துகொள்ள அனுமதியுண்டு"

June 4

Indian voters shown their maturity and giving mandate

limiting arrogance, hypocrisy , mean talks and all overdoing.

Hope better sense prevails. Refusing to learn any moral lessons is not good to the robust high democracy.

Now time to wait and watch Hon President's role

June 4

இடதுசாரிகள் 2024 நாடாளுமன்ற தேர்தலில் முன்னணியில் இருக்கின்ற இடங்கள்..தேர்தல் கமிஷன் தகவல் அடிப்படையில்

சிபிஎம்

ராஜஸ்தான் சிகார் தொகுதி தோழர் அம்ரராம் வெற்றி- பாஜக வேட்பாளர் விட 72896 வாக்குகள் கூடுதலாக.

அலத்தூர் கேரளா, தமிழகத்தில் திண்டுக்கல்- மதுரை முன்னிலை- 3 இடங்கள்

சிபிஅய்

தமிழகத்தில் நாகை, திருப்பூர் இரண்டு இடங்கள் முன்னிலை

சிபிஎம் எல் லிபரேஷன்

பீகார் அர்ரா, கராகட் இரு இடங்கள் முன்னிலை

ஆர் எஸ் பி

கேரளா கொல்லம் ஓரிடத்தில்

June 5

M K Gandhi dreamt so

Replying Reuter's correspondent when going London to participate RTC 1931

" ..I shall work for an India in which poorest shall feel that it is their country in whose making they have an effective voice; an India in which there shall be no high class or low class of people; an India in which all communities shall live in harmony. There will be no room in such an India for the curse of untouchability or intoxicating drinks or drugs. Women will enjoy the same rights as men. Since we shall be at peace with the rest of the world, neither exploiting nor exploited, we should have the smallest army imaginable. All interests not in conflict with the interest of dumb millions will be scrupulously respected, whether foreign or indigenous. I hate the distinction between foreign or indigenous. This is the India of my dreams...."

ஆட்சி அமைக்கும் அரசியல்கட்சி/ கட்சிகள் மட்டுமல்ல, ஒவ்வொரு நாடாளுமன்ற சட்டமன்ற உறுப்பினரும் எடுத்து உள்வாங்க வேண்டிய, அமுல்படுத்த வேண்டிய கனவு. கோடானுகோடி இந்தியர்களிடம் சென்றடைய வேண்டிய கனவு. கனவு கனவாக போய்விடாமல், இந்தியரில் எவரும் high or low என்கிற எண்ணம் உளவியல் ஒழிந்த நாடாக , இத்தேசம் எழட்டும். Equitable distribution என்கிற சூழல் உருவாகட்டும். Fraternity என்பது இயல்பாக மாறட்டும்.

2024 தேர்தலில் வென்றவர்களுக்கு நல்வாழ்த்துகள். தோற்றவர் துவளாமல் மக்கள் நலனில் கவனம் கொள்ள வாழ்த்துகள்

June 9

கிருபளானி அவர்கள் எழுதிய Gandhi His Life and Thought சற்றுப்பெரிய -500 பக்கங்களை மிகக்கூடிய புத்தகமானாலும்- very good account எனச் சொல்லமுடியும். அவர் எப்போதுமே ஆவணக்காரராகவே எழுதும் முறை கொண்டவர். அவர் அறிந்த விஷயங்கள், refer செய்து எழுதும் அம்சங்கள் எல்லாவற்றிற்கும் முடிந்தவரை fact sheet வைத்திருந்தவராக இருந்தார்.

அடிப்படையில் பேராசிரியராக, காந்தியுடன் அவ்வப்போதான சகப்பயணியாக, காங்கிரஸ் செயலராக- தலைவராக, ஆசாத் நேரு மற்றும் சோசலிஸ்ட்களுடன் பெரும் விவாதக்காரராக கிருபளானி இருந்தார்.

கிருபளானியின் இந்த புத்தகத்தை பப்ளிகேஷன் டிவிஷன் காந்தியின் நூற்றாண்டை முன்வைத்து 1969 அக்டோபரில் கொணரவிரும்பியது. Builders of Modern India வரிசையில் 1970ல் வந்தது. இதன் 5வது பதிப்பு 2019ல் காந்தியின் 150யை ஒட்டி வந்தது. ரூ 300க்கு publication division/ Amazon வழி பெறமுடிந்த ஒன்றுதான். நல்ல அக்கவுண்ட் என்கிற எண்ணத்தை எனக்கு ஏற்படுத்திய நூல். கிருபளானியின் எழுத்துக்களை வாசித்தவன் என்கிற வகையில் அவருக்கு bias ஏதும் இல்லவே இல்லை என சொல்லமுடியாது.

இந்த நூலிலிருந்து சில வரிகளைத் தருகிறேன். காந்தி நேருவை வாரிசு என விளித்தது தொடர்பாக, கிருபளானி என்ன புரிதலை வெளிப்படுத்தினார் என்பதைக் காட்டும் வரிகள்..

“ it was at this meeting ( Wardha Jan 1942) that Gandhiji talked of Jawaharlal as his political heir. He said Jawaharlal had been opposing him in life but after his death he would speak his language.

Whether Jawaharlal spoke Gandhiji’s language after his death is for history to decide. As for his being heir to Gandhiji, this has been misunderstood. It had nothing to do with the Prime Ministership of India. Gandhiji himself not being PM could not have named a successor for that position. What he meant was that Jawaharlal would carry on the struggle for the attainment of the independence of India after him. Somewhere Jawahar himself has given this interpretation of what Gandhiji meant by the word heir..”

கிருபளானி எப்படி லாஜிக்காக எழுதுகிறார் பாருங்கள். பலர் இந்நூலை படித்திருக்கக்கூடும். இணையத்திலும் கிடைக்கிறது. இதுவரை வாய்ப்பு பெறாதவர் நேரமும் ஆர்வமும் கிட்டும்போது இந்த பெரிய நூலை பார்க்கலாம்.

June 10

## நாடாளுமன்ற தேர்தலில் இடதுசாரிகள்

நடந்து முடிந்த 2024 தேர்தலில் இடதுசாரிகள் எங்கு நின்றார்கள் , அவர்களின் வெற்றி வாய்ப்பு எப்படி அமைந்தது எனப் பார்க்கத் தோன்றியது. மாநிலவாரியாக ஒவ்வொரு தொகுதியையும் எடுத்துக்கொண்டு இந்த தேடலை நடத்தவேண்டியிருந்தது. 543 தொகுதிகளையும் பார்க்க சில மணிநேர உழைப்பு தேவைப்பட்டது. அப்படிப்பார்க்கும்போதுதான் , பல குறைகளுக்கும் விமர்சனங்களுக்கும் உள்ளான தேர்தல் ஆணையத்தின் வேலை மலைப்பை உணரமுடிந்தது. இதன் பொருள் அவர்கள் மீதான விமர்சனங்களுக்கு பொருள் இல்லை என்பதல்ல. வேலை கடினமான ஒன்று எனப் புரிந்துகொள்ள முடிந்தது. கட்சிகள் , சுயேட்சைகள் என்ற ஜனநாயக உரிமையில் ஏராள non serious players. அவர்கள் அனைவரையும் உள்ளடக்கி வாக்கு சீட்டு , எண்ணிக்கை, ஒவ்வொருவருக்குமான சின்னம், வாக்கு எண்ணிக்கை முடிவுகள்- தொகுதிவாரியாக என்கிற பெரிய வேலையை செய்திடும் இன்ஸ்டிட்யூஷன் அது. 543 தொகுதி பெயரை மட்டுமாவது எழுதிப்பார்த்தால் வேலை புரியும்.

2024 ல் மக்கள் பொதுவாக மேம்பட்ட புரிதலுடன் தீர்ப்பை வழங்கியிருக்கிறார்கள் . மாநிலத்திற்கு மாநிலம் புரிதல் மாறுபட்டுள்ளது என்பதும் கண்கூடு. கட்சிகள் மகிழ்ச்சியடையவும், அதே நேரத்தில் கவலையுடன் தங்கள் நிலையை பரிசீலிக்கவும் மக்கள் அவர்களை வைத்துள்ளனர். மாநிலங்களுக்கு மாநிலம் மக்களின் மனநிலை மாற்றத்தை பார்க்க முடிகிறது. தமிழக மக்கள் திமுக அணிக்கு 40 (39+1) வழங்கி அக்கட்சிகளின் நம்பிக்கையை உயர்த்தியுள்ளனர்.

பாஜக கட்சியோ, திரு மோடியோ தோற்கடிக்கமுடியாத அல்லது தோற்கடிக்கப்படகூடாத சக்தி அல்ல என்பதை மக்கள் தெரிவித்துள்ளனர். திரு மோடி அவர்களின் உடல் அசைவு மொழி காட்டுகிற அலட்சியம் அதிகாரத்துவம், அவரின் தேர்தல்கால கண்ணியக் குறைவான பேச்சுகள் , இந்துகடவுளர்களிடம் அவர் மிகையாக காட்டிய ஆராதனைகள் ஆகியவற்றை இந்துக்களில் ஒரு பகுதியினர் ரசிக்காமல் நிராகரித்துள்ளனர். முஸ்லீம்கள் தங்கள் முழு எதிர்ப்பை வாக்குகள் வழி காட்டியுள்ளனர். ஆனாலும் அவரால் ஆட்சி அமைக்க முடிந்துள்ளது. பாஜக தான் தவறவிட்டுள்ள உட்கட்சி ஜனநாயகத்தை காக்குமா என்பதை பொறுத்திருந்து பார்க்க வேண்டும்.

காங்கிரஸ் ராகுலுக்கு நம்பிக்கை கூடியுள்ளது . ஏற்கத்தகுந்தவராக மாறி வருகிறார். ஆனால் காங்கிரஸ் பாஜகவை வீழ்த்த முழுமையாக வட்டார மாநில கட்சிகளை

நம்பவேண்டிய நிலையில்தான் இருக்கிறது. காங்கிரஸ் இந்த நிலையில் மகிழ்ச்சி கொள்ளும் அளவிற்கு , சுயசோதனையும் தேவைப்படுகிற கட்சியாகவே இருக்கிறது. அங்கும் மேம்பட்ட மனம் திறந்த செயலுக்கு உத்வேகம் கூட்டக்கூடிய உள் விவாதங்கள் தேவைப்படலாம்.

வட்டார கட்சிகள் எல்லாமே , விடுதலைக்கு பின்னர் உச்சமாக கோலோச்சிய காங்கிரசை வீழ்த்தியே வளர்ந்தன. அவைகளின் பிறப்பு வளர்ச்சி என்பதெல்லாம் காங்கிரஸ் வீழ்ச்சியை வைத்தே இருந்தன. பல மாநிலங்களில் வட்டார கட்சிகள் காங்கிரஸ் செல்வாக்கை கணிசமாக குறைத்து விட்டன. காங்கிரசை பலவீனப்படுத்துதல் என்பதில் இடதுசாரிகளுக்கும் அப்போது கணிசமான பங்கிருந்தது.

தேசிய அரசியல் Congress centric என்பதிலிருந்து BJP centric ஆக மாறியிருக்கிறது. காங்கிரஸ் கட்சியோ பாஜகவோ வலுவாக இருக்கும் மாநிலங்களில் தேசிய கட்சிகளை துடைத்தெறிந்து வட்டார கட்சிகளின் உதயம் வளர்ச்சி என்பதும் முற்றிலுமாக நிறைவேறும் என்றால் மட்டுமே , மய்ய ஆட்சி என்பது மாநில கட்சிகளின் கூட்டாட்சி என்ற திசையை எடுக்கும். அது ஒரு வகை புதிய சோதனையாக இந்திய அரசியலில் இருக்கும். Union of states என்பது பல நேரங்களில் union by states என்று புரிந்துகொள்ளப்படுவதைக் காண்கிறோம். இதுவரை கூட்டணி ஆட்சியில் தேசிய கட்சி தான் மய்ய அச்சாக இருந்துள்ளது.

இம்முறை தேர்தலில் இந்திய அரசமைப்பு சட்டம் முக்கிய இடத்தை பிடித்தது. திரு ராகுல் கூட்டங்களில் அப்புத்தகத்தை உயர்த்திக் காட்டினார். திரு மோடி மூன்றாவது முறை பிரதமர் என்றவுடன் அப்புத்தகத்தை வணங்கினார். அரசமைப்பு சட்டம் என்றால் பொதுபுத்தியில் டாக்டர் அம்பேத்கர் என்கிற பதிவு உள்ளது . அவர் சிலைகளில் அதை வைத்துக்கொண்டிருப்பார். ஆனால் தேர்தல் என்பதோ வேறாக இருக்கிறது. மாயாவதி அவர்களின் பிஎஸ்பி யோ, வேறு எந்த அம்பேத்கரிய கட்சிகளோ வாக்குகள் பெறாமல் செல்வாக்கை செலுத்தாதைக் காண்கிறோம். ராம்விலாஸ் பஸ்வான் கட்சி தனக்கான ஆறுதலைப் பெற்றிருக்கிறது.

இனி இடதுசாரிகளுக்கு வருவோம். இந்தியா கூட்டணியில் நின்று தேர்தலை சந்தித்தனர். இந்துத்துவா அரசியலை கடுமையாக விமர்சித்தனர். மோடியின் செயல்பாடுகள் , திட்டங்களை கடுமையாக விமர்சித்தனர். அதானி அம்பானி இந்திய பெரு முதலாளிகளுக்கு , குரோனி காபிடலிசத்திற்கு ஆதரவான அரசு என்கிற விமர்சனம் இருந்தது. வெளிநாட்டுக்கொள்கை குறித்த விமர்சனங்களையும் வைத்தனர். வேலையினமை குறித்த விமர்சனம் இருந்தது. ஆனால் இந்திய முதலாளித்துவ உறவுகள்- நிலச் சீர்திருத்தம்- சுரண்டல் என மார்க்சிய புரிதல்களுடன் கூடிய சொல்லாடல்கள் குறைவாக இருந்தன. தேர்தலில் அவை

பொதுவாக எடுபடாமல் போன அனுபவமும் காரணமாக இருக்கலாம். மாநில கட்சிகளின் முழக்கங்களுக்கு அவர்கள் மாடலை சிறப்பித்து சொல்லுதல், மத்திய மாநில உறவுகள் குறித்த உரையாடல்கள் இருந்தன.

விடுதலை அரசியல் தன்கால கட்சிகளின் உடைவுகளை பெரிதும் பார்த்து வருகிறது. காங்கிரஸ் பல உடைவுகளைக் கண்டது. கம்யூனிஸ்ட் கட்சிகள் உடைந்தன. சோசலிஸ்ட்கள் சிதறினர். மாநில கட்சிகளும் ஆங்காங்கே உடைவுகளை சந்தித்தே வருகின்றன. வலதுசாரி ஜனசங், இந்து மகாசபா சோதனை வழி பாஜக தன்னை உருத்தேற்றிக்கொண்டுள்ளது. பாஜக உட்கட்சி விவாதம் கடந்த 10 ஆண்டுகளில் சரிந்தே போனது. ஆர் எஸ் எஸ் அல்லாத பல சக்திகளை வாக்கரசியல் பலத்திற்காக அது சேர்த்துக்கொண்டது. மோடி ஆர் எஸ் எஸ்க்கும் மேலானவர் எனக் காட்டத்துவங்கினார். பாஜக உள்மோதல்கள் வலுத்து வலது கட்சியின் உடைவுகள் உருவாகுமா என்கிற கேள்வி பதிலுக்கு காத்து நிற்கிறது. அப்போது வலதின் சிவசேனா போன்ற பிரிவு கூட லிபரல் செண்ட்ரிஸ்ட்களால் சேர்த்துக்கொள்ளப்படும் காட்சிகள் உருவாகலாம்.

2

தேர்தல் கமிஷன் தனது இணையத்தில் மாநிலம் மற்றும் யூனியன் பிரதேசங்கள் என 36க்கான - மாநிலவாரியாக தொகுதிகளின் முடிவுகளை வெளியிட்டுள்ளது. 53 கட்சிகளின் பெயர்களுடன் அவர்களின் அனைத்திந்திய வாக்கு சதத்தை வெளியிட்டுள்ளது. இதில் 40 கட்சிகள் நாடாளுமன்றத்தில் இடம் பெற்றுள்ளனர்.

அகில இந்திய வாக்கு சதத்தில் பாஜக 36.6 சதத்தை, காங்கிரஸ் 21.19 சதத்தைப் பெற்று தவிர்க்கமுடியாத தேசிய பெரும் கட்சிகளாக தங்களைப் புலப்படுத்திக்கொண்டுள்ளன. வட்டார அரசியல் இடங்களில் தங்களை வலுவாக நிரூபித்த சமாஜ்வாடி 4.58 திரிணமூல் 4.36 தெலுங்கு தேசம் 1.98 , திமுக 1.82 எனப் பெற்றுள்ளன. ஒயெஸ் ஆர் 2.06, பகுஜன் 2.04 , அதிமுக 1,39 பெற்றன.

சிபிஅய் 0.49 , சிபிஎம் 1.76, சிபிஎம் எல் லிப 0.27 பெற்றன. நோட்டா என்பதில் தேர்தல் ஆணையம் 0.99 சதத்தைக் காட்டியுள்ளது. இடதுசாரிகளில் இக்கட்சிகளுடன் பார்வார்ட் பிளாக், புரட்சிகர சோசலிஸ்ட் கட்சி மற்றும் சோசலிஸ்ட் யூனிட்டி கம்யூனிஸ்ட் கட்சிகளையும் சேர்த்து அவர்கள் பெற்ற வாக்குகள் இங்கு தொகுத்து தரப்பட்டுள்ளன.

சிபிஅய்

ஆந்திரா, அஸ்ஸாம், பீகார், ஜார்கண்ட், கேரளா, சட்டிஸ்கர், மத்தியபிரதேசம், ஒரிசா, பஞ்சாப், தமிழ்நாடு, உபி, மேவ என 12 மாநிலங்களில் நின்றுள்ளது. தமிழ்நாட்டில் 2 இடங்களில் வெற்றி பெற்றுள்ளது. மாநிலங்களில் பெற்ற வாக்குகள் தரப்பட்டுள்ளன. கேரளாவில் கடுமையான போட்டியை காங், பாஜக இரு கட்சிக்கும் தந்ததைக் காணலாம். நின்ற மாநிலங்களில் சிபிஅய் வேட்பாள தோழர்கள் பெற்றவை.

ஆந்திராவில் குண்டூர் வாக்குகள் 8637

அஸ்ஸாம் லக்கிம்பூரில் 19631

ஜார்கண்ட் சட்ராவில் 14122 , ஹசாரிபாக்கில் 10468, தும்கா 11506 லோஹர் டாகா 16793

கேரளா வயநாட்டில் 283023 , மாவேலிக்காரா 358648, திருவனந்தபுரம் 247648, திருச்சூர் 337652

பீகாரில் பெகுசராய் 5,67,851

சட்டிஸ்கர் பஸ்தார் 35887

மத்தியபிரதேசத்தில் சிதி 20290, ஷாடல் 19883 , கார்கோன் 14686

பர்பானி 6649

ஒரிசா ஜகத்சிங்பூர் 8130

பஞ்சாப் பரிதாகோட் 14590

தமிழ்நாட்டில் திருப்பூர் 472739 நாகை 465044 ( வெற்றி பெற்ற இரு தொகுதிகள்)

உபியில் பைசாபாத் 15637 லால்கஞ் 12271 கோஷி 6993 ராபர்ட்ஸ்கஞ் 23852

மேற்கு வங்கத்தில் காட்டல் 74908 மேதினிப்பூர் 57785

தேர்தலுக்கு பின்னரான தன் அறிக்கையில் சிபிஅய் (ஜூன்5 2024) , பாஜக தோல்வி, இந்தியா கூட்டணி வெற்றியை சுட்டிக்காட்டிவிட்டு, இடதுசாரிகள் பெற்ற இடங்கள் குறித்து விரிவாக பரிசீலனை தேவைப்படுகிறது என்பதை உணர்த்தியுள்ளது.

The results of the 18th Lok Sabha election have ended the one party authoritarian, corporate backed communal fascist rule of BJP headed by the Prime Minister Narendra Modi. The people of India have

given their verdict in defence of our constitution and secular democratic fabric of our country and against the politics of hate, discriminations, growing unemployment, attacks on federalism, minorities, democratic and human rights and unparallel miseries of the people with high price rise.

CPI congratulates the people for opposing and challenging the BJP by giving their verdict in defence of “Idea of India” enshrined in the constitution.

While congratulating the parties of INDIA block for their performances, CPI believes that the BJP could have been cut to size more if there could have been better seat-sharing among the partners and united campaigns.

CPI also wants to register its criticism against the Election Commission of India for its failure to contain the hate speeches by Narendra Modi on the issues of communal polarization

CPI will continue to play its important role within the INDIA block as it can play an important role in mobilizing the Indian people in defence of their fundamental rights and for a better future.

The results of the Left as a whole and CPI in particular demands proper introspection. Party will critically review the election results when detailed reports will be available.

3

சிபிஎம்

அஸ்ஸாம், ஆந்திரா, தெலங்கானா, கேரளா, கர்நாடகா, ஜார்கண்ட், மகாராஷ்ட்ரா, ஒரிஸ்ஸா, ராஜஸ்தான், தமிழ்நாடு, திரிபுரா, மேவ ஆகிய மாநிலங்களில் நின்றது. தமிழ்நாட்டில் இரு இடங்கள், கேரளாவில் 1, ராஜஸ்தானில் 1 என நான்கு இடங்களை பெற முடிந்தது. கேரளாவில் காங்கிரஸ் பாஜக எதிர்த்து கடும் போட்டியையும், மேற்கு வங்கத்தில் திரிணமுல் மற்றும் பாஜக எதிர்த்து போட்டியையும் இக்கட்சி தோழர்கள் எதிர்கொண்டனர். சிபிஎம் நின்ற தொகுதிகளும் பெற்ற வாக்குகளும்..

தமிழ்நாடு திண்டுக்கல் 670149 மதுரை 430323 ( இரு தொகுதிகளிலும் வெற்றி)

ராஜஸ்தான் சிகார் 659300 வெற்றி

கேரளா ஆலத்தூர் வெற்றி 403447

கேரளாவில் நின்ற பிற தொகுதிகள்: காசர்கோட் 390010 கண்ணூர் 409542 வடகரா 443022 கோழிக்கோடு 374245

பாலக்காடு 345886 சாலக்குடி 330417 எர்ணாகுளம் 231932 இடுக்கி 298645 ஆலப்புழா 341047 பத்தனம்திட்டா 301504 அட்டிங்கல் 327367

ஆந்திரத்தில் அரகு 1,21,129

அஸ்ஸாம் பர்பேடா 96138

ஜார்கண்ட் ராஜ்மஹல் 37291

கர்நாடகா சிக்கபல்லபூர் 4557

மகராஷ்ட்ரா ஹிங்கோலி 14644

ஒரிஸ்ஸா புவனேஸ்வர் 4148

தெலங்கானா போங்கீர் 28730

திரிபுரா கிழக்கு 290628

மேவ முர்ஷிதாபாத் 518227 கிருஷ்ண நகர் 180201 பாரக்பூர் 109564 டம்டம் 240784 பஷீர்ஹட் 77899 மதுரபூர் 61100

ஜாதவபூர் 258712 கல்கத்தா தெற்கு 168531 ஹவுரா 152005 ஸ்ரீராம்பூர் 239146 ஹூக்ளி 139919 டைமண்ட் ஹார்பர் 86953

ஆரம்பாக் 92502 பர்துமான் புர்பா 176899 துர்காபூர் 153829 ஜார்கிராம் 77302 பங்குரா 105359 அசன்சால் 105964

போல்பூர் 99383 ஜல்பைகுரி 74092 ராணாகாட் 123810

தேர்தல் முடிவுகளை அடுத்து சிபிஎம் கட்சி வெளியிட்ட அறிக்கை (ஜூன் 4 2024) பாஜக வீழ்ச்சியை, இந்தியா அணி முன்னேற்றத்தை சொல்கிறது. இடதுகள் சற்று முன்னேறி இருப்பதாகவும் சொல்கிறது'

The Polit Bureau of the Communist Party of India (Marxist) has issued the following statement:

People's Verdict: Setback for BJP

The results of the 18th Lok Sabha election are a setback for the BJP. It has lost its majority in the Lok Sabha which it had got in the past two Lok Sabha polls in 2014 and 2019. This is a stinging blow to the image of invincibility built around Narendra Modi, who had boasted about winning 400 seats in this election.

The elections were held in the background of all out attacks on the opposition parties, misuse of Central agencies and massive use of money power. The Polit Bureau congratulates the people for standing up to these authoritarian attacks and safeguarding the Constitution, democracy and civil rights.

The INDIA bloc has put up a creditable showing having taken up the issues of unemployment, price rise, agrarian distress and the attacks on democracy and the Constitution. They were able to a considerable extent counter the communal electioneering indulged in by Modi and the BJP.

The results would have been more adverse for the BJP and the NDA if the Election Commission had ensured a level-playing field. It’s abject failure to curb the inflammatory communal rhetoric of Narendra Modi and enforce the Model Code of Conduct is a blot on the reputation of the Commission.

The CPI(M) and the Left parties have registered a marginal improvement in their tally. A more detailed analysis will be undertaken after the full election results are available.

The verdict signals that the people are going to fight back all attacks on democracy, the Constitution and their livelihood.

4

சிபிஎம் எல் லிபரேஷன் :

பீகார் ஒரிஸ்ஸா பகுதிகளில் தன் செல்வாக்கை காட்டியுள்ளது

பீகார் அர்ரா 529382 கராகட் 380581 இரு தொகுதிகளிலும் வெற்றி

பீகார் நாலந்தா 3903038

ஒரிஸ்ஸா கோராபுட் 14852

ஆந்திராவில் காக்கிநாடா 2823

அகில இந்திய பார்வர்ட் பிளாக் AIFB

அஸ்ஸாம், கர்நாடகா, பீகார், ஆந்திரா, மேவ, உபி என பல மாநிலங்களில் நின்றாலும் பல இடங்களில் 5000க்கும் குறைவான வாக்குகளையே இக்கட்சி பெற்றுள்ளது. சில தொகுதிகளின் வாக்குகள் மாதிரிக்காக…

பீகார் பாடலிபுத்ரா 1302, பூர்ணியா 6854

மபி கஜூரஹோ 50215

மகாராஷ்ட்ரா நாக்பூர் 567 வார்தா 1438 மாதா 3067 மும்பாய் வடகிழக்கு 678

ஆந்திரா நந்தியால் 642, கடப்பா 755, ராஜம்பேட் 5672, மசூலிப்பட்டினம் 5254

ஜம்மு காஷ்மீர் அனந்நாக்1562 ஜம்மு 984

தெற்கு டெல்லி 540 பெர்ஹாம்பூர் 2291 தெலங்கானா செவல்லா 3748 மகபூபாபாத் 39136 ஜாகிராபாத் 1769

உபி கன்னோஞ் 801 பஸ்தி 2998 மீர்சாபூர் 3487 கான்பூர் 465

மேவ கூச்பிகார் 30267 பரசத்

நேதாஜிக்கான செல்வாக்கை வாக்குகளில் இக்கட்சியால் பெறமுடியவில்லை

ஆர் எஸ் பி

ஆர் எஸ் பி கொல்லத்தில் 443628 வாக்குகள் பெற்று வெற்றி பெற்றுள்ளது. இங்கு அது சிபிஎம்மை தோற்கடித்தது.

பஞ்சாப் நின்ற இரு இடங்களில் 1000க்கும் குறைவாகவும், மேவ நின்ற மூன்று இடங்களில் அலிப்பூர் 39709 , ஜாய்நகர் 40113, பலூர்கஹட் 54217 பெற்றது

ஆர் எஸ் பி ஆந்திராவில் நர்சரபேட் 1245, இந்துபூர் 2051, நெல்லூர் 2804

SUCI Communist

பீகார், சட்டிஸ்கர், குஜராத், ஹரியானா, கேரளா, மேவ , டெல்லி, மபி ஆந்திரா, அஸ்ஸாம், ஜார்க்கண்ட் கர்நாடகா போன்ற பல மாநிலங்களில் 151 இடங்களில் நின்றது. இடதுசாரி கட்சியிலேயே மிக அதிக இடங்களில் நின்ற கட்சி. தேர்தல் முடிவைப் பற்றி எந்த கவலையும் கொள்ளாமல் நின்றிருப்பார்கள் போல இருக்கிறது. பெரும்பாலான இடங்களில் 1000க்கும் குறைவாகவும் பெற்றுள்ளனர். சில இடங்களில் 2000-4000 அளவில் பெற்றுள்ளது. சிப்தாஸ்கோஷ் இக்கட்சியை தொடங்கும்போது பெரும் கனவுடன் இருந்தார்.

இந்திய அரசியல் தேர்தலில் 2024ல் இடதுசாரிகள் ஒன்றாக ஏறக்குறைய 3 சத வாக்கைப் பெற்றுள்ளனர். இது பல வட்டார கட்சிகளைவிடக் கூடுதலானது என்றாலும், அவர்கள் செல்ல வேண்டிய தூரம் அதிகமாகவே இருக்கிறது. Self Introspection எப்படி வரப்போகிறது எனப் பார்ப்போம்.

10-6-2024

June 11

New age, people's Democracy, Liberation, Red Flag, Monthly Review, Proletarian Era போன்ற பத்திரிகைகளை பழகியவர்களுக்கு கனடா யார்க் பல்கலைக் கழகப் பேராசிரியர் ராஜூ தாஸ் எழுதிய

The Political Economy of New India Critical Essays எளிதாக போகக்கூடும். மேற்குறிப்பிட்ட இடது பத்திரிகைகளின் மொழிக்கிடங்கு பரிச்சயத்திற்காக அவற்றை குறிப்பிட்டேன்.

ராஜூ தாஸ் புத்தகம் வந்து மூன்று ஆண்டுகள் ஆகின்றன. தாராளமயமான இந்தியா, விவசாய நெருக்கடி, இந்தியாவில் கல்வி எனும் சரக்கு, இந்து உரிமைசார் அரசாங்க அமைவு, இந்திய கோடானுகோடி உழைக்கும் மக்களின் நலவாழ்வு, வறுமை ஒழிப்பு, இடதுசாரிகளின் பங்கு, புதிய இந்துத்துவ அரசாங்க சூழலில் இடதுகள் ஏன் எப்படி மக்கள் திரள் அரசியலை முன் எடுப்பது போன்ற அம்சங்களை பேராசிரியர் விவரிக்கிறார். வழக்கமான இடதுசாரி சொல்லாடல்கள் கனவுகளைக் கொண்ட நூல்தான்.

ராஜூ எழுப்பும் சில கேள்விகள் பொருட்படுத்த தகுந்தவை. சிந்தனையை தூண்டக்கூடியன. இதில் அத் 8 க்கு ராஜூ இவ்வாறு தலைப்பிட்டுள்ளார். People's Poverty vs Poverty of Left Theory / Practice. இந்த மாதிரி தலைப்புகளை மார்க்சியர்கள் மார்க்ஸ், லெனின் ஆகியவர்களிடமிருந்தே சற்று மாற்றி எடுத்துக்கொள்வதுண்டு. மார்க்ஸ் புருதானின் The Philosophy of Poverty க்குப் பதிலாக poverty of Philosophy எழுதினார். ராஜூவிடம் இத்தலைப்பு செல்வாக்கை செலுத்தியிருக்கலாம். இதில் ராஜூ சொல்லியிருப்பது

The poverty of Left theory and practice and theory of poverty must be considered together in their mutual interconnection.

இந்திய இடதுசாரிகளையோ இயக்கத்தையோ அதன் தலைவர்களையோ ராஜூ குறைத்து மதிப்பிடவில்லை என்பதையும் சொல்கிறார். ஆனால் அவர் குறையாக தான் உணர்வதை சுட்டிக்காட்டுகிறார்.

What is Marxist theory in India is a healthy soup of : anti feudalism, anti imperialism, anti communalism and with a slight touch of social democratic reformism. There is not much systematic theoretical discussion on materialism and dialectics, on class relations, class consciousness, political economy, nature of peripheral capitalism.

ராஜூ சொல்கிற பல அம்சங்களை இடதுசாரிகள் தங்கள் ஆவணங்களில் கொணராமல் இல்லை. அவை பொதுவாகவும் abstract ஆகவும் , Marxian parlance ல் fit in செய்யப்பட்டும் சொல்லப்பட்டு வருகின்றன என்பதாக எனக்குப்படும். பொதுவான சுரண்டல் social exploitation என்ற அளவில் பேசப்பட்டிருக்கும்.

தனித்தனியான பெரு முதலாளிகள் குறித்த study போதுமானதாக இராது. அதற்கான resources ஆக இடது repositories இல்லையோ எனத்தோன்றும்.

ராஜூ மற்றொரு குறையைச் சொல்கிறார்

Rigorous regular discussion on Marxist Theory , including Ideas from Marx, Lenin , Trotsky, Luxemburg etc among many scholars are rare. While there is some direct engagement with Marx Lenin and Mao, that too in a very selected and perfunctory manner, there is effectively little discussion on Trotsky or Luxemburg. Is it not there anything in voluminous work of these writers that one can appreciate?

ராஜூ இந்த அத்தியாயத்தில் எழுப்புகிற முக்கிய கேள்வி

The main theoretical problem of the Left may be stated as thus: there is a need for theorising much more rigorously consistently the internal connection between India's capitalist class relations and its social problems, within a multi scholar framework, than is the case now

If poverty is fundamentally caused by capitalist class contradictions, does the Left in India take capitalist class relations seriously enough, intellectually and politically

வாய்ப்புள்ளபோது ராஜூ பேசும் பிற கருத்துக்களைப் பார்ப்போம்.

June 12

“ There is a difference between nationality and nationalism. Nationality means consciousness of kind, awareness of the existence of that tie of kinship. Nationalism means the desire for a separate national existence for those who are bound by this tie of kinship...For nationality to flame into nationalism two conditions must exist.First there must arise the will to live as a nation..secondly there must be a territory which nationalism could occupy and make it a state, as well as a cultural home of the nation. Dr B R Ambedkar page 192 Indian Nationalism Edited by Irfan Habib

june 13

இந்தியாவில் சாதி உருவாக்கம் குறித்து ஏராள ஆய்வுகள், ஊகங்கள் , அபிப்பிராய முன்மொழிவுகள் இருக்கின்றன. இதுதான் மிகச்சரியான ஆய்வு என நேர்மையானவர் எவரும் உரிமை பாராட்டாமல் இருப்பதையும் காணமுடிகிறது. பல நேரங்களில் அரசியல் தேவைகளுக்கேற்ற முகாந்தர முனைப்புகளாக , இந்த சமூக ஆய்வுகள் செல்வதையும் உணரமுடிகிறது. உத்தேச மதிப்பிடல்கள், ஊக முன்மொழிவுகள்தான் என்றால் அங்கு நிதானம் தொழிற்படும்.

புகழ் வாய்ந்த தென்னிந்திய சமூகம் குறித்த ஆய்வாளர் நொபுரு கராஷிமாவும், ஆய்வாளர் எ சுப்பராயலு அவர்களும் எழுதிய 4 கட்டுரைகள் தொகுக்கப்பட்டு, அத்துடன் இணைப்பாக கராஷிமாவின் நினைவுக் குறிப்பொன்றும் இணைக்கப்பட்ட நூல் ஒன்றை என் சி பி எச் 2017ல் வெளியிட்டனர். நூலின் பெயர் “ தமிழகத்தில் சாதி உருவாக்கமும் சமூக மாற்றமும்” . சிறிய 75 பக்க நூல்தான். 2022 பதிப்பில் ஸ்டிக்கர் ஒட்டி ரூ 100 ஆக்கியுள்ளனர்.இப்போது வேறு ஸ்டிக்கர் உள்ளதா தெரியவில்லை.

இனி நூலில் இந்த ஆசிரியர்கள் முன்வைக்கும் சில கருத்தாக்கங்களை, நான் உணர்ந்த அளவில் தருகிறேன்.

கட்டுரைகள் பொது ஆண்டு 800-1500 வரைக்கான காலத்தைக் குறித்து கல்வெட்டுகளின் வழி வந்த ஆய்வை வெளிப்படுத்துபவை.

சாதி உருவாக்கத்துக்கு மனுதர்ம கோட்பாட்டை காரணியாக குறிப்பிட்டாலும், அடிப்படையில் பொருளாதாரமே முக்கிய காரணியாகும். நிலவுடைமை சமூக நிலைப்பாட்டை அதிகாரத்தை நிர்ணயித்தது.

தீண்டாச்சேரி, பறைச்சேரி என இரு வாழிடங்கள் குறிப்பிடப்படுகின்றன. தீண்டாச்சேரியில் வாழ்ந்தவர் எவர் என தெளிவு படுத்திக்கொள்ள முடியவில்லை. புலையரா பள்ளரா விளங்கிக்கொள்ளமுடியவில்லை.

பறையர்கள் என்ன தொழிலை செய்தனர் என்பதற்கு பல தகவல்கள் கிடைக்கின்றன. நிலத்தை உழுது வந்தவர் என உறுதியாகச் சொல்லமுடியவில்லை. நெசவு , கைவினைப் பறையர் எனவும் குறிப்புகள் உள்ளன.

பெரிய புராண விவரணைகளில் புலையர்களின் சொந்த ஜீவனத்திற்கு நிலம் ஒதுக்கப்பட்டதைக் காணமுடிகிறது. கிராமத்தின் உயர்சாதி மக்களின் எந்த ஆதாயத்திற்காக , எம்முறையில் வலுவந்தமாக அவர்கள் உழவில் ஈடுபடுத்தப்பட்டனர் என்பதில் தெளிவு கிடைக்கவில்லை.

மராத்தி பார்ப்பனரிடமிருந்து பள்ளர் குத்தகை ஒப்பந்தம் செய்துள்ள குறிப்பு உள்ளது. பள்ளாடிச் சேரி, பண்ணைப் பள்ளன், பண்ணையாள் என்கிற பள்ளர் தொடர்பான குறிப்புகள் இருக்கின்றன.

சோழர் காலத்தின்போது தீண்டாதார் என்கிற பல சமூகங்கள் இருந்தபோதிலும் அவர்கள் யார் என அடையாளம் காண முடியவில்லை. தமிழ் நாட்டைப் பொறுத்தவரை இடைக்கால சோழர் காலத்தில் , அதாவது பொ ஆ 10-13 நூற்றாண்டில் சாதி ஒரு சமூக நிறுவனம் என்கிற வகையில் முழுமையடைந்தது எனலாம்,

பறையர் புலையர் மட்டுமல்ல வெள்ளாளர் கூட அடிமையாக விற்க வாங்கப்பட்டுள்ளனர். அவர்களுடைய குடியிருப்புகளும் விற்கப்பட்டுள்ளன

கொடையாளிகள் நிலையில் பிராமணர், வெள்ளாளர், வணிகர் இருந்துள்ளனர். எல்லா வகையிலும் முதன்மையிடத்தை வகித்த இனங்களாக பிராமணர் வெள்ளாளர் ( 850-1300) வருகின்றனர்.

11-12 நூற்றாண்டில் வலங்கை இடங்கைப் பிரிவுகள். 13 ஆம் நூற்றாண்டில்தான் இடங்கை 98 சாதிகள் பற்றி குறிப்புகள் கிடைக்கின்றன.

ஓம்படைக் கிளவிகள் எது பாவம் தண்டனை என்ன , எது துரோகம் என்றெல்லாம் எழுதப்பட்டன.

கல்வெட்டில் குறிப்பிடப்பட்ட சாதி என்பது இக்காலப் பொருள் கொண்டதாக இல்லை. அது பட்டப்பெயரால் தெரியும் சமூக நிலை, தொழிலால் சமூகத் தகுதி, குடிவழி சமூகத் தகுதி என்பதாகத் தெரிந்தது.

உண்மையான சாதிப் படிநிலை தரப்படுத்தல் அரசர்கள் , அலுவலர், வட்டாரத் தலைவர்களால் மேற்கொள்ளப்பட்டது. சமூக ஒழுங்கைப் பேணுவதற்கு சாதிப்படிநிலையை அரசியல் அதிகாரம் முறைப்படுத்தியது.

சாதி உருவாக்கத்தின் நிகழ்வு வளர்ச்சி கலப்பு திருமணத்தால் உருவாகவில்லை. வட்டார சமூக ஒழுங்கில் அதிகாரம் பெற்ற குழுமங்கள் ஒருங்கிணைப்பு வழியாக சாதி உருவாக்கம் நடந்தது. பழைய புதிய குழுக்கள் மோதல் மறு ஒழுங்காக்கம் என காரணிகள். புதிய படிநிலையின் நிறுவல் அரசனால் முறைப்படுத்தப்படாமல், வட்டார மக்கள் சபைகளால் முறைப்படுத்தப்பட்டன. இந்த முறைப்படுத்தலில் பிராமண கருத்துநிலையே தொழிற்பட்டது.

எளிய நூல்தான். எவரும் படித்துவிடலாம்.

ஜெயசீலன் ஸ்டீபனின் தமிழகத்தில் சாதியை கண்டுபிடித்தல் ( 1871க்கு முன்) நூலை வாசிக்கும்போது , பார்க்கலாம் அவர் என்ன முன்மொழிவுகளைத் தருகிறார்

என்று. இந்த ஆய்வுகளில் எல்லாம் இட்டு நிரப்ப வேண்டிய இடைவெளிகளே இல்லை எனச் சொல்ல முடியாது.

வட இந்தியாவில் சாதி உருவாக்கத்திற்கும் ( மேற்கு , கிழக்கு என்றும் பார்க்க வேண்டும்) தென்னிந்தியாவில் சாதி உருவாக்கத்திற்கும் காரணிகளாக தொழிற்பட்டவை எவை எனவும் பார்க்கப்பட வேண்டும். பிராமணிய கருத்து நிலை, சத்திரியர் ( அரசர்) சாதி நிறுவல்களுக்கு உதவுதல், நில ஆதிக்கம், ஏவலுக்கு உடல் உழைப்பை தந்த பிரிவினர் கீழ்சாதிகளாக கெட்டிப்பட உறைய வைத்தல் என்கிற பொதுக்காரணிகள் இருந்தாலும், ஊர் சபை மக்கள் மன்றம், ஆங்காங்கே வட்டார அதிகாரங்கள் அவற்றில் இடம் பெற்ற சாதி படிநிலைகள் என்பதெல்லாம் தனித்த விசேஷ ஆய்வுக்குரியனவாக இருக்கின்றன.

june 14

## இந்திய அரசியல் வலதின் vertical split ஒன்றிற்காக காத்திருக்கிறதா?

காங்கிரஸ் பல பிளவுகளைக் கண்டுவிட்டது. கம்யூனிஸ்ட் கட்சியும் பிளவுகளைக் கண்டுவிட்டது. சோசலிஸ்ட்கள் சிதறி போய்விட்டனர். திராவிட இயக்கமும் பிளவுகளைப் பார்த்து நிற்கிறது. தாய் அமைப்பின் சில அடிப்படை core ideological அம்சங்களை எடுத்துக்கொண்டும் , அதில் இறுக்கம் அல்லது தளர்வுகளுடன் இந்தப் பிளவுகள் நடந்தேறின.

வலதும் இந்து மகா சபா ஆர் எஸ் எஸ் என இசைவும் முரணும் கொண்ட அரசியல் சக்திகளாக பயணித்தன. ஆர் எஸ் எஸ் கலாச்சார ஸ்தாபனம் எனச் சொல்லிக்கொண்டாலும், தேர்தல் அரசியலில் நேரடியாக பங்கேற்பை செய்யாவிட்டாலும், முழு அரசியல் பார்வையை , தனது சித்தாந்த பள்ளியை நடத்திக்கொண்டிருக்கும் இயக்கம். அதன் கட்டுப்பாட்டில் ஏராள வெகுஜன அமைப்புகள் செயல்பட்டு வருகின்றன. பொது கூடுகையில் அவைகளுக்கான general directions வழங்கப்படுகின்றன.

காந்திபடுகொலையில் சந்தேக நிழல் இந்து மகாசபா மற்றும் ஆர் எஸ் எஸ் மீது விழுந்தபோது, நேரு அமைச்சரவையில் இருந்த சியாமா பிரசாத் முகர்ஜி, ஆர் எஸ் எஸ் குருகோல்வால்கரை சம்மதிக்க வைத்து ஜனசங்கம் என்கிற புதிய இந்துத்துவ கோட்பாட்டை உள்வாங்கிய அமைப்பை , 1951 ல் தொடங்கினார். ஆர் எஸ் எஸ் தனது தேர்ந்த கேடர்களை முழுநேர அரசியல் கேடர்களாக அங்கு அனுப்பியது. தீனதயாள், வாஜ்பாயி, அத்வானி போன்ற மூத்தவர்கள் இப்படித்தான் ஜனசங்க மூத்தவர்களாயினர்.

ஜனதா சோதனையில் ஜனசங்கத்தை ஒருங்கிணைத்த அனுபவத்திலிருந்து மாற்றிக்கொண்டு , தங்களுக்கான சற்று வலது லிபரல் தோற்றத்துடன் பாஜக உருவாக்கினர். ஆர் எஸ் எஸ் தொண்டர் பலம் பாஜக வளர்ச்சிக்கு பெரும் பங்காற்றியது. பாஜக அரசியலில் வளர வளர , வாஜ்பாய்- அத்வானி போன்ற உயர் தலைவர்கள் அனைத்து முடிவுகளையும் ஆர் எஸ் எஸ் கேட்டுத்தான் எடுக்கவேண்டும் என்பது சாத்தியமில்லை என்ற நிலைக்கு வந்தனர். சுதர்சன் - வாஜ்பாய் மோதலும் அப்போது சற்று வலுத்தது. இப்போது பகவத் பேசியது போல் பகிரங்க குற்றச்சாட்டுகளை சுதர்சனும் வைத்தார். பின்னர் சமரச ஏற்பாடுகள் நடந்து , வேறுபாடுகள் மூடப்பட்டன. இதற்கு முன்னரே கூட ஒருமுறை இந்திரா ஆதரவு என்கிற நிலைப்பாட்டைக்கூட , வேறுபாடுகள் காரணமாக ஆர் எஸ் எஸ் எடுத்தது.

பாஜக வளர வளர , கோடிக்கணக்கான உறுப்பினர்கள் சேரசேர ( opportune elements caring not and beyond their ideologies)பாஜக ஆர் எஸ் எஸ் நிழல் கட்சியாக

செயல்படுவதில் நடைமுறை சிக்கல்கள் எழலாயின. பாஜகவின் மரபு தொண்டர்களாக ஆர் எஸ் எஸ் கேடர்கள், லட்சக்கணக்கான ஆர் எஸ் எஸ் பயிற்சியற்ற புது வரவுகள் என்கிற இரு பெரும் பிரிவுகளுடன் பாஜக நகரத் தொடங்கியது. அமைச்சர்கள், அமைப்பு பொறுப்பாளர்கள் என்பதில் புதியவர்கள் கணிசமான இடங்களை எடுத்துக்கொள்ளலாயினர்.

Theory and Practice சங்கடங்களை பிற அமைப்புகள் போலவே ( காங், கம்யூனிஸ்ட், திக- திமுக, அதிமுக) ஆட்சிக்கு வந்த பாஜகவும் உணர வேண்டியதானது. தனக்கு நெருக்கடி வரும்போது aggressive Hindutva பக்கமாகவும், சற்று நம்பிக்கை கூடுதலாக இருக்கும்போது வளர்ச்சி மக்கள் முன்னேற்றம் என செக்யூலர் அம்சங்களையும் அது பேசவேண்டியதானது. 2014ல் மோடி என்கிற அடையாளத்தை பாஜக எடுத்து சோதித்தது. ஆர் எஸ் எஸ் மற்றும் பாஜக வின் அடையாளமாக ஆரம்பித்த திரு மோடி அவர்கள், தனது பெரும் வரலாற்று உருவாக்க- பெயர் பொறித்தல் என்கிற உளவியலில் சிக்குண்டார். அவரது கார்யகர்த்தா தொண்டர் கற்றுக்கொள்ளல் என்பதெல்லாம் மூடப்பட்டு, larger than life பிம்பத்தை அவர் conscious ஆக ஏற்றிக்கொண்டார். இதற்கு அனுசரனையான அமைப்பாட்களை பதவி சுற்றில் வைத்துக்கொள்ளலானார்.

ஆர் எஸ் எஸ் பயிற்சியில் தூய இசம் பேசுவோர் தள்ளி வைக்கப்பட்டனர். அல்லது தள்ளிப்போகலாயினர். Personality cult என்பதை ஆர் எஸ் எஸ் வெளிப்படையாக ஏற்பதில்லை. அதன் கார்யகர்த்தா கல்ச்சர் இதனால் பஞ்சர் ஆகும் என அறிந்தும், அவ்வியக்கத்தால் மோடியின் personality cult பின்னப்படும் வேகத்தை தடுக்க முடியவில்லை. ஏகத்தலைவர் என்கிற ஆர் எஸ் எஸ் அமைப்பு முறையும் , திரு மோடிக்கு கைகொடுத்தது. ஆர் எஸ் எஸ் அல்லாதவர்கள் இரு சோதனைகளில் அங்கு தேறவேண்டியிருக்கிறது. ஒன்று கட்சி என்றால் அங்கு சிறிதளவாவது ஜனநாயக குரலுக்கு இடம் இருக்க வேண்டும். மற்றொன்று ஆர் எஸ் எஸ் தூய இந்துத்துவா வாக்கு வங்கி அரசியலில் எப்போதும் கைகொடுக்குமா என்பது.

வலது அரசியல் தன் முரண்களை எப்படி தீர்த்துக்கொள்ளும் எனத் தெரியவில்லை. வலது aggressive agenda vs Right liberals agenda என்கிற மோதல் வெளித்தெரியும் அளவிற்கு இன்னும் போதுமானதாக வளரவில்லை. வலது அறிவுஜீவிகள் ஆர் எஸ் எஸ் பக்கமாகவும், பாஜக பக்கமாகவும் பிரிந்து பேசவேண்டிய நிலையும் தொடங்கியுள்ளது. மோடி அவர்களை லிபரல் என எடுத்துக்கொள்ளமுடியாது என்பதை அவர் பறைசாற்றிவிட்டார். ஆனால் opportunistic individual cult tendency உடைய மனிதர் என்கிற வகையில் இந்த முரண்களில் அவர் தனக்கான காய்களை நகர்த்துவார். வேடங்களை கட்டுவார். வாக்கு பெறக்கூடியவர் என்கிற வகையில் பாஜக லிபரல்கள் அவரை வைத்து ஆட்சி அதிகாரம் என்கிற காட்சிகளை நடத்துவர். ஆர் எஸ் எஸ் இந்நாள் வரை necessary evil என சகித்துக்கொண்டிருக்கலாம். மோடி

பிம்பம் வீழ வீழ ஆர் எஸ் எஸ் தன் விமர்சனங்களை கூர்மைப் படுத்தும். தன் control area வில் தலைமையைத் தேடும்.

வலது முரண்களின் மோதல் உடைவை நோக்கி செல்லுமா என்பதை ஊகிக்க முடியவில்லை. ஆனால் வளரும் எதன் ஒன்றின் மோதலும் பிரிவிற்கு இட்டுச் சென்ற வரலாற்றுத்தடம் இருக்கிறதே...பார்க்கலாம்

14-6-2024

june 16

ஆச்சார்யா கிருபளானி எழுதியுள்ள Gandhi His Life and Thought குறித்து முன்னர் இடுகை ஒன்றை செய்திருந்தேன். சற்று பெரிய நூல்- 514 பக்கங்கள். நல்ல ஆவணம் என எனக்கு தோன்றியதை குறிப்பிட்டிருந்தேன்.

முதல் 300 பக்கங்கள் காந்தியின் வாழ்வு - நிகழ்வுகள் போராட்டங்கள், உறவுகள், உரையாடல்கள் என கிருபளானி அடுக்கியிருப்பார். நந்தா, பியாரிலால், டெண்டுல்கர், பி சி கோஷ், ஜியாப்ரே போன்றவர்களை ஆங்காங்கே துணைக்கு வைத்திருப்பார். ஆசாத் அவர்களின் India wins Freedomத்தில் இடம் பெற்றுள்ள பல கருத்துக்கள்- நினைவுகள் தவறு என்றோ, ஞாபக மறதி என்றோ பல இடங்களில் சுட்டிக்காட்டியிருப்பார். ஆங்காங்கே கிருபளானி காந்தியிடம், நேருவிடம், படேலுடன்- பெரும்பாலும் ஆசாத்துடன் மாறுபட்டதையும் சொல்லிச் செல்வார்.

இங்கு நான் எழுத வந்தது, நான் வியந்து போன அவரின் முக முக்கிய எழுத்துப்பகுதியாக இந்நூலில் இடம்பெற்றுள்ள பகுதி 2 குறித்துதான்- வெறும் 125 பக்கங்களில் His Thought ( Gandhiji's) என்று காந்தியின் செயல் சார்ந்த சிந்தனைப் பிழிவை brilliant styleல் , grip செய்யக்கூடிய மொழி நடையில் கிருபளானி தந்திருப்பார். கிருபளானி எழுத்துக்களை சற்று வாசித்தவன் என்கிற வகையில் , சில இடங்களில் அவர் தன் text யை நகர்த்துவது அற்புதம் என வாய் திறந்து சொல்ல வைக்கிறது.

நல்ல மொழிபெயர்ப்பாளர் எவரேனும் தமிழில் இந்த 125 பக்கங்களையாவது கொணர்ந்தால், காந்திய தமிழ் கிட்டங்கிக்கு பெரும் சேவையாக இருக்கும். கிருபளானியின் இந்த 125 பக்கங்கள் நல்ல வழிகாட்டும் பகுதியாக எனக்குத் தென்படுகிறது. காந்தி குறித்து critics சொல்லக்கூடிய பல்வேறு விமர்சனங்களுக்கும் தான் அறிந்த அளவில் தெளிவை இப்பகுதியில் கிருபளானி தந்திருப்பதாகவே எனக்குத் தோன்றுகிறது. கிருபளானியின் இந்நூல் தமிழில் வந்திருக்கிறதா என எனக்கு தெரியவில்லை.

இப்பகுதியில் 125 பக்கங்களுக்குள் கிருபளானி விவாதித்திருக்கும் சில topics

1. An Integral Approach to Gandhian Thought
2. Gandhiji and Religion
3. Theory of Satyagraha
4. Political Thought
5. Economic Thought

6. Social Reform and Untouchability
7. Gandhiji and the Muslims
8. Gandhiji and Women
9. Prohibition
10. Constructive programme
11. Gandhiji and organisation
12. Gandhiji and Marx
13. Was Gandhiji Modern?
14. Gandhiji as world citizen

எவ்வளவு முக்கியமான விவாத தலைப்புக்களை அவர் எடுத்துக்கொண்டுள்ளார். 54 ஆண்டுகளுக்கு முன்னர் 1970 களில் எழுதப்பட்ட நூல் என்பதையும் மனதில் நாம் சேர்த்து பார்க்க வேண்டும். காந்தியுடன் சக பயணியாக அவரை நேசித்து, முரண்பட்டு பின்னர் காங்கிரசிலிருந்து வெளியேறி வாழ்ந்த மனிதர் ஒருவரின் எழுத்து என்பதன் சிறப்பையும் நாம் சேர்த்து கவனிக்க வேண்டும். அருகில் இருந்து காந்தியின் அசைவுகளை ' தெய்வ நிலைக்கு பார்த்தவர் அல்ல கிருபளானி. சக அரசியல் பயணியாக , உடன் நின்ற வகையில் அவரை உள்வாங்கியவர். கிருபளானி எழுதிய பலவரிகளை தரவேண்டும் போல் இருந்தாலும், அது இங்கு இயலாது. சில வரிகள்

Gandhiji was not an intellectual in the academic sense of the term ( அதானப் பார்த்தேன்). He was not a scholar or a philosopher. He was not a theoretician. His thinking had the quality of a creative genius ( பாருங்கள் என்ன அருமையான உள்வாங்கல்) and not that of a student. He was pre eminently a man of action. He has written a great deal but his writings are designed as a guide to action ( கவனிக்க வேண்டிய இடம்) and not for the acquisition of knowledge. They are generally concerned with the solution( தீர்விற்கான தவிப்புடன்) of his actual problems, arising out of the many sided and complex situations of his time.

The discussion of theory is always brief and sketchy..explanations were brief and suited to the person, place and occasion. The guidance given was practical…Gandhiji has written few books. They are not written with the object of explaining his system of thought rationally logically argued in all its implications..

Gandhiji as practical reformer, relied more on example than on precept or preaching. Gandhiji's ideas are new and revolutionary. He did not acquire his ideas and knowledge merely from books (

பட்டாபி கவனிக்க) . Much of his knowledge was the result of direct contact with life ( மார்க்சியர் பேசும் learn from the masses) and practical experience it offered.

He placed his ideas before public not in the language of learned but in that of the average intelligent of man and woman. In that he did not use the philosophic and technical language of schools. He described his own observations and his reactions..His practical schemes of work and his explanations, therefore, crated his philosophy. …He viewed life as an organic whole. …

Gandhiji seeks to synthesise the material and spiritual, the individual and the collective life. As occasion demands, he emphasises the one or the other. He often said that he could ' carry God to the poor In a bowl of rice'

சொல்லிக்கொண்டே போகலாம். இந்திய அரசியல் உலகு தேர்தல் உத்திக்கான ஒற்றைப் பாதையாக்கப்பட்டுவிட்டது. அந்த சத்த உலகில் வாக்கு மாற்றத்திற்கான செலாவணியாக காந்தியோ மார்க்சோ தென்படவில்லை என்பதை அறிய முடிகிறது. கிருபளானி சொல்கிறார்

The moral decay of a people has always preceded their physical and material degeneration. In India all intellectual transactions are carried on through counters which have no exchange value in reality.

வாய்ப்பும் நேரமும் கிடைப்பவர் இந்த 125 பக்கங்களை படித்து பார்க்கலாம்

june 17

So said Gandhiji

I do not believe in people telling others of their faith, especially with a view to conversion. Faith does not admit of telling. It has to be lived and then it becomes self propagating.

All religions are true. All religions have error in them. I do not believe in the exclusive divinity of vedas. I believe the Bible, the Koran and the Zend Avesta to be as much divinely inspired as vedas. My belief in the Hindu scriptures does not require me to accept every word and every verse as divinely inspired.

I decline to be bound by any interpretation, however learned it may be, if it is repugnant to reason or moral sense

I have found that life persists in the midst of destruction and therefore there must be a higher law than that of destruction. Only under that law would a well ordered society be intelligible and life worth living. And if that is the law of life, we have work it out in daily life

june 18

அமெரிக்க மார்க்சிய அறிஞர் பால் ஸ்வீசி மறைந்து 20 ஆண்டுகள் ஆகிவிட்டன. அவர் மறைந்தபோது எழுதிய கட்டுரை ஒன்றை தேடி எடுக்க முடியவில்லை.

1949ல் ஸ்வீசி தனது தோழர் லியோ ஹூபர்மென் உடன் இணைந்து புகழ் வாய்ந்த Monthly Review யைக் கொணர்ந்தார். இன்றும் இடது உலகில் பேசப்பட்டு வரும் மாத இதழது. எனக்கு எப்படி யாரால் அறிமுகமானது என மறந்துவிட்டது. 2006 வரை ( எப்போது வாங்க ஆரம்பித்தேன் என்பதும் நினைவில் இல்லை) வீட்டிற்கு வந்தது.

அமெரிக்க இதழ் மன்த்லி ரிவ்யூ , கரக்பூர் மே வ ஏஜென்சி ஒன்றின் மூலம் , எனக்கு வந்த நினைவு. அப்போது அந்த இதழுக்கு உலகம் முழுவதும் 8000 subscribers இருந்திருக்கலாம். அதில் ஒரு சந்தாதாரர் என்கிற பெருமிதம் ( தேவையா என்பது வேறு) இருந்த நேரமது.

பழைய party life, Janata weekly of socialists, Mainstream, Frontier weekly என இதழ்கள் ஆண்டுதோறும் bound செய்யப்பட்டதுண்டு. AITUC , CITU, INTUC, BMS, NFTE பத்திரிகைகளை பவுண்ட் செய்த தோழர் தீனன் தானே இவற்றை எடுத்துப் போய் பவுண்ட் செய்து தந்துகொண்டிருந்தார். ஊரில் இருந்த 'வீட்டு மாடி ' நூலகத்திற்காக இருந்தது. சென்னை வரும்போது அப்படியே பெரும்பாலானவற்றை விட்டுவிட்டு வரவேண்டிய நிலை ஏற்பட்டது. சமீபத்தில் மறைந்த தோழர் கார்த்தி ஆர்வத்துடன் அவரால் இயன்ற அளவு பராமரித்ததாக தெரிவித்திருந்தார். எல்லாம் soiled ஆக , பிரித்தாலே எனது சைனஸ் வியாதியை தூசு ஒவ்வாமையை அதிகரித்து விடுவதை உணர்ந்தேன்.

எந்த சேர்த்து வைப்பாலும் ஆகப்போவதென்ன என்றாலும், மனம் அவற்றை நாடாமல் இருப்பதில்லை. பால் ஸ்வீசி புத்தகம் ஒன்றை (மாடர்ன் காபிடலிசம்) படிக்க ஆரம்பித்த நேரத்தில் , இந்த நினைவுகள் எழுந்தன. அவரின் எழுத்துக்கள் அவ்வப்போது மன்த்லி ரிவ்யூ வில் வரும். ஆர்த்தோடாக்ஸ் மார்க்சியம் குறித்து விமர்சன பார்வை வைத்திருந்தார். அதே நேரத்தில் அம்மார்க்சிய எழுத்தாளர்களின் பங்களிப்பையும் விதந்து பேசுவார். தன் மீது நியோ மார்க்சியர் என்கிற லேபிள் ஒட்டப்படுவதையும் அவர் கவனமாக தவிர்க்க விரும்பினார்.

மார்க்ஸ் காலத்திற்கு பின்னர் பெருமளவில் மாறிபோன புதிய முதலாளித்துவம், ராட்சத கார்ப்பரேஷன்கள்- managerial bureaucrats பங்களிப்புகள், ஏகபோகங்களின் காலத்தில் அரசு நிறுவனத்தின் role, சோவியத் சோசலிச பொருளாதார கட்டுமான பிரச்சனைகள், புரட்சிக்கு பிந்திய சமூக கட்டுமான பிரச்சனைகள் என ஏராள அம்சங்களில் அவர் தனியாகவும், தன் அறிஞர் தோழர்களுடன் இணைந்தும் ஆய்வுகளை நமக்கு கொடுத்துச் சென்றுள்ளார்.

பொருளாதார அறிஞர்கள் ஸ்கும்பீட்டர், கலேக்கி, கால்பிரயத், பரேட்டோ, மார்ஷல், கீன்ஸ் , பாரன் என பலரும் ( நான் என்னத்த கண்டேன்) ஸ்வீசி நூலில் வருகிறார்கள். Ten Great Economists, நீலகண்டன் அறிமுகத்தில் வந்த பொருளாதார மேதைகள் குறித்த மற்றொரு நூல் ( இரண்டு அட்டைப்படமும் ஒரே மாதிரி இருப்பதாக எனக்கு தோன்றும்) என கொஞ்சம் மேய்ந்திருந்தாலும், பொருளாதார அறிவு எனக்கு கிஞ்சிற்றும் இல்லை. ஆனாலும் பால் ஸ்வீசி மற்றும் மன்த்லி ரிவ்யூ எழுத்தாளர்கள், ஆகார் புக்ஸ் வெளியீடு என அவ்வப்போது தேடிப் போகாமல் இல்லை.

மார்க்சின் காபிடல் முதல் வால்யூம் இரு முறை , இரண்டாம் வால்யூம் ஒருமுறை, மூன்று பாதியில்- 30- 35 ஆண்டுகளில் பார்த்து கிழித்தது என்கிற லட்சணம் வேறு. எனக்கு புரியலை என்பதைவிட, என் உழைப்பு அவற்றில் போதவில்லை என்பதுதான் சரியாக இருக்க முடியும். அரசியல் பொருளாதாரத்தை வெறும் பார்முலா மாதிரி உள்வாங்க முடியாத கஷ்டம். Abstractions decoding என்பதில் உள்ள சங்கடம். மானுட அறிவெல்லாம் உத்தேச முன்மொழிவுகள் , அவை இறுதியான absolute இல்லை என்கிற மனத்தடை. கடவுள் முதல் கம்யூனிசம் வரை கற்பிதங்களே - பெரும் கதை உரையாடல்களே என்கிற பின்நவீனத்துவ பொல்லாப்பு..என பல ரீங்காரங்கள்.

சில நேரம் காந்தியை காட்டி மனது தப்பிக்கவும் செய்கிறது ( இது ரொம்ப ungandhian நெறி என்றாலும்) . காந்தி சொன்னார்

Every human being has the right to live and therefore find the wherewithal to feed himself and where necessary to clothe and house himself . But for this simple performance we need no assistance from economists or their laws.

Nature produces enough for our wants from day to day, and if only everybody took enough for himself and nothing more, there would be no pauperism in this world..but so long as we have got this inequality, so long we are thieving.

போகட்டும்..பால் ஸ்வீசியை நேசிக்கக்கூடிய மன்த்லி ரிவ்யூ குழாமினர் இருக்கத்தான் செய்கிறார்கள்..

18-6-2024

june 20

Was Gandhi Modern? இந்த தலைப்பில் ஆய்வு நூல் ஏதேனும் வந்திருக்கிறதா என எனக்கு தெரியவில்லை. ஆனால் ஆச்சார்யா கிருபளானியின் சிறிய கட்டுரை இத்தலைப்பில் இருக்கிறது. 6 பக்க அளவிலான மிகச் சுருக்கமான கட்டுரையது. அவர் எழுதிய Gandhi his life and thoughtல் இறுதிப்பகுதியில் இக்கட்டுரை ஒரு தனி அத்தியாயமாக இடம் பெற்றுள்ளது. தனியான essayக்கான valueம் கொண்ட கட்டுரை

எதெல்லாம் ஒருவரை நவீன மனிதராக உணர வைக்கிறது..எவை ஒருவரை பழைய பத்தாம்பசலி கர்நாடக கோமளியாக காட்டுகிறது. பொது புத்தியில் என்ன உறைந்து கிடக்கிறது என்கிற கேள்விகள் அவசியமாகிறது. இந்த கேள்விகளில் சிக்குண்ட காந்தி குறித்து, அவரவர் போக்கில் அவரை விமர்சிப்பவர், வசை வீசுபவர் - பத்தாம்பசலி reactionary எனச் சொன்னவர்- சொல்பவர் உளர்.

கிருபளானி, இவையெல்லாம் நவீனம் என்றால் காந்தி எந்த அளவு நவீனமானவர்- இவையெல்லாம் நவீனமில்லை என்றால் அவர் எந்த அளவு அப்படியானவர் இல்லை என இதில் விவாதித்திருப்பார். கிருபளானியின் மணியான சில வரிகளை இங்கு பரிமாறுகிறேன். சுவைத்து பார்ப்போமே..புரிந்துகொள்வோமே..

இதெல்லாம் மாடர்ன் என்றால் காந்தி மாடர்ன் மனிதரே என்பதற்கு…

If adherence to truth and the supremacy of the moral law is modern, Gandhiji was modern.

If keeping one’s word and fulfilling one’s engagement is a sign of modernity , Gandhi was modern.

If personal cleanliness and that of one’s surroundings are marks of modernity, surely Gandhiji was modern.

If eating for the sake of not satisfying a sophisticated palate but for keeping one’s body fit for the work of others is modern, then Gandhiji was modern.

If tolerance and good understanding are modern, Gandhiji must be considered modern.

If feeling at home with those who differ from one or who are opponents is modern, Gandhiji was modern.

If universal courtesy, without caring for position or power or wealth is modern, then surely Gandhi was modern.

If democratic way of life is modern, Gandhi was among the elect.

If identification with the lowly and the lost is modern, then Gandhi was modern.

If untiring work for the poor , the needy, the downtrodden, the unfortunate, the daridranarayan is modern, then Gandhiji was modern.

If standing aloof in the midst of raging human passions is modern, then Gandhiji was modern.

Above all

If dying for a noble cause is modern, then Gandhiji was modern

இவையெல்லாம் மாடர்ன் என்றால் காந்தி மாடர்ன் இல்லை என்பதற்கு

If adoption of western forms in dress food etc is modern, then surely Gandhi was not modern.

If drinking and smoking, use of coffee tea etc are signs of modernity, then Gandhi was not modern.

If dining in fashionable costly hotels, visiting pleasure houses, night clubs is modern, then Gandhi was not modern.

If wasting time in scandal mongering and useless gossip is modern ( as every minute of him was passed in serving the poor), then Gandhi was not modern.

மேலே கூறியவற்றை சொல்லிவிட்டு கிருபளானி மாடர்ன் என்பது பற்றி எழுதுவார்

The word modern without its content is merely a judgement. It is not a quality or value judgement. Modernity is like fashion which is something fleeting and transitory.

Individuals and nation must order their lives by ideas and ideals which are more stable and permanent.

சரி . நமக்கான எடுப்பு என்ன ...ideas , ideals, moral laws, self discipline, exemplary ness , no double standards, serving the needy to feel their power of their selves என்பதில் எல்லாம் நாம் ஒவ்வொருவரும் எவ்வளவு மாடர்ன் என்கிற கேள்விகளாவது மிஞ்சவேண்டும் என்பதே

20-6-2024

june 21

போரில்லா உலகு போலவே போதையில்லா உலகம் என்பதும் மானுடரின் இலட்சிய கனவில் ஒன்றாகவே பயணிக்கிறது. ஆசை அறுமின் போலவே போதை ஒழிமின் என்பதும் ideal ஆகவே செல்கிறது.

மனித போதை வெவ்வேறு வடிவங்களில் தொற்றிக்கொள்கிறது. பணப்போதை, சொத்து போதை, புகழ் போதை, வஸ்துக்களின் போதை, குடி உட்பட மயக்க போதை என மனிதன் வரலாறு நெடுக கட்டுண்டு கிடந்து வருகிறான். சோமபானம் சுராபானம் துவங்கி கள்ளச்சாராயம் வரை போதை வரலாற்றுப் பாதை மிக நீளமானது. குடி குடியைக் கெடுக்கும் போன்ற வாசக கவர்ச்சிகள், சொற் செட்டு ஈர்ப்புகள் எல்லாம் போதைக்கு முன்னால் நிற்க முடியாமல் போவதை ஜூன் 19 கள்ளக்குறிச்சி சாவுகள் காட்டுகின்றன.

போதை உலகிற்கு பெரும் நிதி தேவைப்படுகிறது. கொழுத்த இலாபம் பார்க்கக்கூடிய வர்த்தகமாக இருக்கிறது. Money profit victims என்கிற பார்முலா அங்கு தொழிற்படுகிறது. சினிமா ரசிகர்கள் உச்சம் போலவே, போதை ரசிகர்கள் உச்சம் சென்று பலியாகிறார்கள்.

போதை உலகிலும் class caste சார்ந்த வேறுபாடுகள் உண்டு. உயர் சரக்கும் உயர் வர்க்கமும் பெருநகரமும் நேர் விகிதத்தில் அமையும். நல்ல அல்லது கள்ளச் சாராயமும் அடித்தட்டு வர்க்கமும் கிராம சிறு நகரங்களும் நேர் விகிதத்தில் இருக்கும்.

பொருளாதாரத்தில் crony என்பது போல போதை உலகிலும் அரசியல் மற்றும் அதிகார வர்க்க கூட்டு களவாணித்தனம் செயல்படும். இதிலும் உயர்தட்டு அடித்தட்டு என்கிற வகைப்பாடு இருக்கும்.

சாவின் ஓலத்தை சந்தித்த கிராம அலறல்கள் சில நாட்களில் பலவீனமாகிவிடும். அரசாங்கம் உதவி என்ற பெயரிலும், damage control என்ற உத்தியிலும் தரும் உயிர் பலிக்கான ஈட்டுத் தொகை அக்குடும்ப பெண்களிடம் பத்திரமாக இருக்க வேண்டும். உழைக்கிற குடும்ப பெண்கள் மேலும் பொழுதை உழைப்பு நேரமாக்கி, தன் குடும்ப ஆண் இடத்தை ஈடாக்க வேண்டும். வாழ்வின் வலியுடன் உழைப்பின் வலியும் சேர்ந்த நுகத்தடிக்குள் அப்பெண்கள் தங்களை பூட்டிக்கொள்ள நேரிடும். அரசியல் optics எல்லாம் சில நாட்களில் ஓய்ந்து எதார்த்த வாழ்வின் கோரத்தை அக்குடும்பங்கள் சந்தித்து போராட வேண்டி வரும். மகள்களும் மகன்களும் பெரும் சோகத்தின் 'பானர்களாக ' சில நாட்களாவது அப்பகுதியில் இருப்பர். போதை உலகின் தீங்கங்குகள் இனியாவது எங்கள் குடும்பத்திற்கு வரவேண்டாம் என அம்மகனார்கள் எடுக்கும் உறுதிப்பாட்டில்தான் , அவர்களின் எதிர்காலம் அமையும்.

போர் அழிவு போலவே போதை அழிவு உலகும் பெரும் எண்ணிக்கையிலானது. போர்க்கால அடிப்படையில் பணி என்பது போல போதை ஒழிப்பு கால அடிப்படையில் பணி என்ற புதிய சொல்லாட்சி வரலாம். போதையிலிருந்து சமாதானம் என்கிற பெரும் தனி மனித போராட்டத்தை அவரவர் தொடங்காமல் , அவ்வுலகை சாய்க்க முடியுமா எனத் தெரியவில்லை. காந்தியை காணடித்த சோகம்.

போதை ஒழிப்பு என்கிற இலக்கு மானுட வாழ்வில் போதை உலகு என்பதுடன் சமதையாக பயணித்துக்கொண்டேதான் இருக்குமா?

june 21

Gilbert Slater திராவிட ஆய்வாளர் மத்தியில் தெரிந்த பெயர். கில்பர்ட் தனது The Dravidian Element in Indian Culture மூலம் இன்றும் இருந்து வருகிறார்.

கில்பர்ட் சிலேட்டர் சென்னை மாகாணத்தில் 1920களில் சென்னை பல்கலை பொருளாதார பேராசிரியராகவும் அதற்கு முன்னரும் பல்வேறு நிலைகளில் பணியாற்றி தென் இந்தியா குறித்து , குறிப்பாக தமிழ் மக்கள் குறித்து அறிந்தவர். தனது நூலில் அவர் நீதி கட்சி தலைவர் டி எம் நாயரை குறிப்பிட்டுச் சொல்கிறார். அவருடன் கில்பட்டிற்கு பழக்கம் இருந்திருக்கக்கூடும்.

கில்பர்ட் சிலேட்டரின் இந்த நூல் 1924ல் லண்டனில் வெளிவந்தது. தமிழில் மிக நேர்த்தியாக, வாசகர் எளிதாக உணர்ந்து செல்லும் வகையில் பன்மொழிப்புலவர் கா. அப்பாத்துரை மொழிபெயர்த்துள்ளார். சைவசித்தாந்த கழகம் ' இந்திய நாகரிகத்தில் திராவிடப் பண்புகள்' என 1955ல் கொணர்ந்தது.

கில்பர்ட் புத்தகம் திராவிடர் இயக்கம் பற்றி பேசக்கூடியவர் ஆங்காங்கே காட்டும் ref ஆக வந்தாலும், பரவலான வெளிச்சத்திற்கு செல்லவில்லை. கில்பர்ட் முடிவுகள் பல , தமிழக பொது புத்தியில் உறைந்து கிடக்கும் எண்ணம் பலவற்றை கேள்விக்கு உட்படுத்தக்கூடியதாக இருக்கும். கில்பர்ட்டின் ஆங்கில நூல் இணையத்தில் கிடைக்கிறது. அறிஞர் அப்பாத்துரை மொழிபெயர்ப்பு மிக கச்சிதமான ஒன்று. தமிழ் மொழிபெயர்ப்பும் அப்பாத்துரையம் தொகுப்பு 20 ல் இருக்கிறது. இதில் அவர்கள் திராவிடப்பண்பு என்கிற தலைப்பில் அப்பாத்துரை அவர்களின் கில்பர்ட் மொழிபெயர்ப்பை , பெயர் மாற்றி வைத்துள்ளனர். இணையத்தில் கிடைக்கிறது.

கில்பர்ட் தனது 7 அத்தியாயங்கள் மூலம் வந்தடைந்த சில ஆய்வுப் புள்ளிகளை இங்கே சுருக்கமாக தர முயல்கிறேன். இவற்றையும் நாம் உத்தேச முன்மொழிவுகளாகவே எடுத்துக்கொள்வது நலம். இனி கில்பர்ட்...அப்பாத்துரை வழியாக..

இன்று நமக்குக் கிட்டியுள்ள வடிவில் இருக்கும் வேதம் உருவான காலத்தில் சமஸ்கிருத மொழி பேசிய மக்களில் கணிசமானவர் திராவிட இனத்தவராக இருந்தனர்.

எல்யட் சுமித் இடப்பெயர்வு நூல்படி புதிய பண்பாட்டு மக்கள் திராவிடர்க்கு முற்பட்ட மக்களுடன் கலப்புற்று திராவிடராயினர். இப்புடை பெயர்ச்சிக் காலத்தில் திராவிடர் வேடர், மீன்படவராக இருந்தனர்..தமிழ் நாகரிகத்தை தோற்றுவித்து செம்மைப்படுத்திய மனப்பண்பு வேட்டுவ மூதாதையிரிடமிருந்து வந்திருக்க வேண்டும்.

ஆரியர் வருகைக்கு முன்னர் ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னராவது, இந்தியா வந்தடைந்த பண்பாட்டுக் கூறுகள் , ஏற்கனவே இந்தியாவில் குடிபுகுந்திருந்தவருடன் கூடி கலப்புற்றன என்றும், திராவிடப் பண்பாடு அக்கலப்பின் வழி ஏற்பட்டது என்றும் கூறுவது பொருத்தமானதாகும்.

இந்தியாவில் ஆரியக் கோட்பாடு மக்களது உணர்ச்சியின் அடிப்படையிலேயே இயங்குகின்றது. ஆரியரில் மூத்த மரபினர் என்கிற பெருமிதம் , மதிப்புணர்ச்சி கொள்கின்றனர்.

பிராமண சாதியில் உச்சநிலை உயர்வோ, சாதி வேறுபாடோ கூட ஆரிய மரபு எனக்கூறிட ஆதாரமில்லை என்கிறார் மாக்ஸ் முல்லர். பின் சாதிமுறை ஆரிய வழக்கமில்லாவிட்டால், அது திராவிட வழக்கமா என்ற கேள்வி எழுகிறது. சற்று சிக்கல் வாய்ந்த கேள்விதான்.

வட இந்தியாதான் மிகுதியும் ஆரியமயமாயிருக்க முடியும். பல படையெடுப்புகளுக்கு ஆளாகியிருக்கவேண்டும். வட இந்தியா சாதி முறையின் வாழ்வகமாயிருந்திருக்க வேண்டும். ஆனால் நிலைமை இதற்கு நேர்மாறானதென்பது நாற்சந்தியும் அறிந்த உண்மை .வட இந்தியாவைவிடத் தென் இந்தியாவிலேயே சாதி முறைமை வலுப்பெற்றதாகவும் பெருக்கமுடையதாகவும், சமூக வாழ்வில் மிகப்பெரும் பங்குடையதாகவும் இருக்கிறது.

ஆரியருக்கு முற்பட்ட திராவிட இந்தியாவில் ஆரியரிடமில்லாத , ஆனால் இன்றைய இந்து மதத்தில் உயிர்நிலைப் பண்பாயுள்ள ஒரு மந்திரக் குருமார் வகுப்பு அல்லது சாதி இருந்ததென்று அறியலாம். பிராமண சாதியும் , சத்திரியர் சாதிக்கு மேற்பட்ட அதன் ஆதிக்கமும் திராவிட மரபுகளே. அறிஞர் ஓல்ட்ஹாம் சான்றுகள் இதை வலுப்படுத்துகின்றன.

பிராமணர்கள் தொடக்கத்திலேயே ஆரிய புரோகித வகுப்பாயிருந்து வந்தவர் எனில், இந்து சமூகத்தில் பிராமண ஆதிக்கம் ஏற்பட்டது போல், இந்திரன் போன்ற வேத தெய்வ வணக்கம் சிறப்பு பெற்றிருக்கும். ஆனால் அவை மறைந்து போய்விட்டன.

பிராமணர் தனிக் குறியீடாக பஞ்சு நூல் இருக்கிறது. பருத்தி நூற்பு வேத ஆரியரின் தொழிலாயிருந்திருக்க முடியாது. ஆரியர் திராவிடர் போராட்டத்தில் பல படிகள் இருந்திருக்கலாம். போராட்டங்கள் ஊடே செயல் எதிர் செயல் விளைவுகள் நடந்திருக்கலாம். மொழி சார்ந்தும் இருந்திருக்கலாம். இப்போராட்டத்தில் திராவிடர் சமஸ்கிருதம் கற்க வேண்டியிருந்திருக்கலாம்.

இவ்விதம் திராவிடர் ‘மொழியில் ஆரியமயமாக்கப்பட்ட’ போது, ஆரியர் ‘பண்பாட்டில் ‘ திராவிடமயமாக்கப்பட்டனர். குருமார் சாதி என தனிப்பயிற்சி

இல்லாமலேதான் படையெடுப்பாளர் இந்தியாவில் புகுந்துள்ளனர். பிராமண சாதி குருதிக் கலப்பால் ஆரியமயமாயிற்று.

திராவிட நாகரிகம் ஆரிய நாகரிகத்தை விட பேரளவு பழமையானது. நாகரிக வளர்ச்சியில் சமய கருத்து செயலாற்றலில் , குருமார் சாதி ஆதிக்கம் என்பதில் திராவிட நாகரிகம் எகிப்து , மெசபட்டோமியா நாகரிகங்களை ஒத்து இருக்கிறது

கள் இறக்கும் தொழில் பனையின் தாய்நாடாகிய மெசமெட்டோமியாவிலிருந்து வந்திருக்கலாம்.

உண்மையில் வேத சூக்தங்களும், இந்து சமயமும் இருவேறு வகைப்பட்ட மனப்பான்மையின் விளைவுகள். நாக வணக்கம் நாடு முழுதும் இருக்கிறது. முனிசாமி தென் இந்தியாவில்.

வேத காலத்திற்கு முன்பே சிவன் திருமால் வழிபாடுகள் திராவிடரிடம் இருந்தன. மீனாட்சி திராவிடரின் ஊரம்மன்.

திராவிட உள்ளத்தின் தனிச் சிறப்புக்குரிய முனைப்பான பண்பு யாதெனில், அது எல்லாத் துறைகளிலும் தனிச் செய்தியிலிருந்து பொது விதியமைதிக்கு தாவிடும். பொதுவிலிருந்து மற்றவற்றை வருவிக்கும். போதிய சான்றில்லாமலும் பொது விதிக்கு வந்து விடுவர். எளிதில் அதை அவர்கள் கைவிடுவதில்லை.

நெல் விளைவு திராவிட நாகரிகத்தின் பொருளியல் அடிப்படை. ஆரம்பத்தில் அவர்களும் வேளாண்மை தொடர்பில்லாமல் அலைந்து திரிந்தவரே. எகிப்திடன் நேரடி தொடர்பு கொண்ட பகுதி தென் இந்தியா. சீன நாகரிகமும் நெல் பொருளியலே.

குருமார் வகுப்பு உடல் உழைப்பினரிடமிருந்து பிரிந்த அறிவு வகுப்பாயினர். திராவிடர்களில் தாய்வழி மரபு தந்தை வழி மரபு என இரண்டும் இருந்துள்ளது. குழந்தைப் பற்று அடிப்படையாக இருந்துள்ளது.

சாதி ஒரு திராவிட சமூக முறை . சாதி முறைக்கு காரணம் தொழில் அல்லது இன வேறுபாடு அல்ல . இரண்டும் சேர்ந்தவை. தொழிற்முறை தேர்ச்சி, தனித் தொழில்களில் தந்தை வழியாக பற்று வளர்தல், தொழிற்முறை மாறுபாடுகள் காரணமாக புதிய சாதிப் பிரிவுகள் என உருவாகியிருக்கலாம்,

அயலார் படையெடுப்புகளால் திராவிட நாகரிகம் மிகுதி தாக்கப்படாத பகுதிகளில் தான் சாதி முறை உச்சமாக வளர்ச்சி அடைந்தது. எனினும் வேறு ஆற்றல்களும், இன வேறுபாடுகளும் காரணமாயின.

திராவிட மக்களின் சமூக அமைப்பு முறையில் சாதி முறைக் கருதும் கோட்பாடு மிக முற்பட்ட காலத்திலேயே நிலைப் பெற்றிருந்தது. ஆரியர் படையெடுப்பு சாதி

முறைமைக்கு மூல காரணமல்லாவாயினும், இரண்டு கூறுகளை வலியுறுத்தி உயர்வு தாழ்வு போக்குகளை வகுக்கும் போக்கை, நிற வேறுபாடுகளை தரங்களுடன் இணைக்கும் போக்கை உருவாக்கியது. படிமுறை ஒழுங்கை செய்தது.

நெற்பயிர் விளைவித்த பறையரும் பள்ளரும் தீண்டப்படாதவரானதற்கு காரணம் காண்பது அவ்வளவு எளிதன்று. தீண்டாமை நிலைத்து விட்டபின் இயல்பான வளர்ச்சி காரணம் பெற்று விடுகிறது. பார்ப்பன வகுப்பின் தோற்றம் இன்னும் ஆராய்ச்சிக்குரியதாகும்.

சென்னை நகரம் ( 1920 களில்) 5 லட்சம் மக்களை கொண்டது . அங்கு இந்து, மெயில், எக்ஸ்பிரஸ், நியு இந்தியா, ஜஸ்டிஸ், ஸ்வராஜ்யா என 6 ஆங்கில பத்திரிகைகள் வருவது ஆச்சர்யமானது. உலகில் அப்போது அயல்மொழியில் இவ்வளவு பத்திரிகைகள் வரும் நகரம் வேறு இருக்க முடியுமா? ஆங்கிலம் தென் இந்தியாவின் மொழியாகியுள்ளது.

திராவிட மொழிகள் தங்களிடம் இணக்கம் கொண்டு வளர பொது எழுத்துமுறை வேண்டும் என்கிற என் ( சிலேட்டர்) கோரிக்கை நிராகரிக்கப்பட்டது. அவர் அவர் தங்களின் பழமைப் பற்றில் இருந்தனர்.

மேலை உலகு இந்தியாவிடமிருந்து கற்க வேண்டி வரும். அறிவு வணிகம் எங்கு நடந்தாலும் ஆங்கிலம் பேசும் திராவிடர் அதன் சிறந்த இடையீட்டாளர்களாய் விளங்குவர்.

கில்பர்ட்டின் இந்த நூலை அப்பாத்துரையின் நல்ல தமிழில் எவரும் வாசித்துவிடமுடியும் . 200 பக்கங்களுக்கும் குறைவான நூல்தான். திராவிடர் ஆய்வில் குறிப்பிடத் தகுந்த நூலும் கூட.

21-6-2024

june 22

டெரி ஈகிள்டன் அவர்களை எனக்கு பேரா வி இராமசாமி தான் அறிமுகப்படுத்தினார். எங்கள் இளம் கம்யூனிஸ்ட்கள் குழுவில் சற்று மூத்தவர் தோழர் இராமசாமி. அப்போது அவருக்கு மணமாகி இரு குழந்தைகள் இருந்தனர். எங்களுடன் எங்களை ரசித்து கொண்டாடி பல மணிகள் ஒன்றாக இருப்பார். தோழர் தா பாண்டியன் , ஹிரன் முகர்ஜி கட்டுரை எனில் உற்சாகம் பொங்கப் பேசுவார்.

திரு வி க அரசு கல்லூரியில் முற்போக்கு சிந்தனை கொண்ட பல பேராசிரிய பெருமக்கள் இராமசாமி கூட நின்றனர். மறைந்த பேரா அறிவழகன் , சுவாமிநாதன், பாலு, பழநி, கெளதமன் என தொடர் பேராசிரிய தலைவர்கள் இருந்தனர். வங்கி தொழிற்சங்கத் தலைவர் ரகுவின் அறை நல்ல சந்திப்பு விவாத இடமாக இருக்கும். ரகு இப்போது பொள்ளாச்சியில் அதே துடிப்புடன் செயலாற்றி வருகிறார்.

பேரா இராமசாமி உதவியால்தான் அங்கு சமூகவியல் பேரவை துவங்க முடிந்தது. தோழர் வெங்கட் ராமன் ( மணியரசன் தோழர்) தோள் கொடுத்தார். பின்னர் பேரா கெளதமன் பொறுப்பேற்று நடத்தினார். பேரா இராமசாமியும் நானும் இணைந்து ராஜிவ் காலத்தில் கொணரப்பட்ட கல்விக்கொள்கை குறித்து பிரசுரம் எழுதி வெளியிட்டோம். மக்ரோத் கமிஷன், யுஜிசி பரிந்துரைகள் குறித்து கல்லூரி ஆசிரியர்களிடம் பேச தொழிற்சங்க கவுன்சில் செயலர் ( 50 க்கும் மேற்பட்ட தொழிற்சங்க அமைப்பு) என்கிற வகையில் வாய்ப்பு கொடுத்தனர். இன்றும் 45 ஆண்டுகளுக்கு மேலாக அக்கூட்டமைப்பை தோழர்கள் திறமையாக நடத்தி வருகின்றனர். ஊர் முழுவதும் ஏராள இளம் தொழிலாளர்களை அவ்வமைப்பு ஈர்த்தது. ஏராள இயக்கங்களை நடத்திவரும் அமைப்பாக இருக்கிறது.

கல்லூரி மாணவர்கள் மத்தியிலும் அவ்வப்போது பேச முடிந்தது. கல்லூரி நூலகத்தை பயன்படுத்த அனுமதித்தனர். இந்திய கம்யூனிஸ்ட் கட்சியின் வரலாற்று ஆவணங்கள் கூட அக்கல்லூரி வரலாற்றுத்துறை வழியாக வாங்க முடிந்தது. செகுவார புத்தகங்களை நான் கொடுத்த நினைவு. மார்க்சிய புத்தகங்கள் இப்போது கல்லூரியில் பராமரிக்கப்படுகிறதா எனத் தெரியவில்லை.

பிறை அறிவழகன் தான் நுகர்வோர் கவுன்சிலின் தந்தை என அறியப்பட்டார். அவர் சீடர்கள் இன்றும் நுகர்வோர் கவுன்சிலை சிறப்பாக நடத்தி வருகின்றனர். பேரா சுவாமி, பேரா பழநி கல்லூரி ஆசிரிய சங்க மாநில பொதுச் செயலர்கள் ஆயினர்.

தோழர் இராமசாமி பின்னர் செனட் உறுப்பினராகி திருச்சிக்கு சென்றுவிட்டார். கல்லூரி நூலகத்திற்கு பல மார்க்சிய எழுத்தாளர்களின் புத்தகங்களை , அதிக பிரச்சனை ஏதுமின்றி அங்கு வாங்க முடிந்தது. ஈகிள்டன் புத்தகங்களும் அப்படித்தான் அங்கு வந்தது. Critical Theory, Literary criticism போன்ற நூல்களை பேரா

இராமசாமி, இளைஞனாகிய என்னிடம் படிக்க சொன்னார். குறிப்பெல்லாம் எடுத்து அவருடன் ஏதோ தெரிந்த அளவு உரையாடிய நினைவு. எழுதச் சொல்லி தூண்டுவார். சரி செய்து கொடுப்பார். என் கட்டுரைகள் நியு ஏஜில் வந்தது குறித்து மகிழ்ந்தவர்.

சரி. ஏன் இந்த நினைவுச் சுழல் இப்போது. காரணம் ஈகிள்டன் தான். Why Marx was Right - Terry Eagleton படிக்க ஆரம்பித்ததால், 'பழைய நினைப்பு பேராண்டி' வந்தது. ஈகிள்டனின் why Marx was right 2011ல் வெளியான ஆய்வு நூல். கல்கத்தா சீகல்ஸ் போட்ட பதிப்பைத்தான் நான் பார்த்தேன். சீகல்ஸ் குவார்ட்டர்லி கூட ஓரிரு முறை வாங்கிய நினைப்பு ( எல்லாம் தான் என்ன செய்து...என்பது வேறு) .

ஈகிள்டன் தன் ஆய்விற்கு மார்க்ஸ் குறித்து மிக அதிகமாக வந்திருந்த , சொல்லப்படுகிற 10 விமர்சனங்களை எடுத்துக்கொண்டு, ஒவ்வொன்றிற்கும் பதிலாக ஒவ்வொரு அத்தியாயத்தை அமைத்துக்கொண்டார். முன்னால் preface இறுதியில் conclusion என அவர் நூலை அடுக்கியிருப்பார். மார்க்ஸ் குறித்து விமர்சிப்பவர்கள், அவர் விமர்சனத்திற்கு நல்ல பதிலை தேடக்கூடியவர்கள் ஈகிள்டனை படிக்கலாம். மார்க்சியம் மீது விருப்பம் கொண்டவர் , சற்று மெதுவாக உள்வாங்கி இந்நூலை படிப்பது நலம். எந்த emotional bondsம் இல்லாமல் எவ்வளவு முடியுமோ அந்த அளவிற்கு reason out செய்து தன் பார்வையை ஈகிள்டன் பின்னியிருப்பார்.

மார்க்சியம் குறித்து பொதுவாக சொல்லப்படும் விமர்சனங்களை வைத்துவிட்டு, தான் அறிந்த பதில்களை ஈகிள்டன் தந்திருப்பார். அவர் விவாதிக்க எடுத்துக்கொண்ட விமர்சனங்களை மிகச் சுருக்கமாக இங்கு தந்துள்ளேன்.

மார்க்சியம் முடிந்து விட்டது.அவ்வளவுதான். Marxism is finished

மார்க்சியம் கோட்பாடு என்கிற அளவில் மகிழ்விக்கலாம். நடைமுறையில் அது பெரும் கொடுங்கோன்மை- திரள் கொலை. Marxism may be well in theory . Whenever put into practice , the result has been terror tyranny mass murder.

மார்க்சியம் தீர்மானகரவாதம். மனிதர்களை வரலாற்றின் கருவியாக குறைத்துவிடுகிறது. தனி நபர் சுதந்திரத்தை அனுசரிப்பதில்லை. Marxism a form of determinism. It sees men and women simply as tools of history, strips their freedom and individuality.

மார்க்சியம் உடோபிய கனவு. மானுட இயல்பை கவனிக்காத, எதார்த்த புறக்கணிப்பு. Marxism is a dream of Utopia. Marx's vision of the future reflects the absurd unreality of his politics whole

மார்க்சியம் எல்லாவற்றையும் பொருளாதாரவாதத்தில் சுருக்கிவிடுகிறது. வரலாற்றின் பன்முக அனுபவங்களை இப்படி ஒரு தட்டில் சுருக்கிவிட முடியாது. Marxism reduces everything to economics- economic determinism. Marx was simply an inverted image

of the capitalist system he opposed- varied range of historical experiences cannot be crammed into a single rigid framework.

மார்கஸ் பொருள்முதல்வாதி. அவர் குரூரமாக மதத்தை மறுக்கிறார். மானுடரின் ஆன்மீக உலகம் குறித்து அவர் கவலைப்படவில்லை. Marx was a materialist. He was brutally dismissive of religion, for him end justifies means. He had no interest in the spiritual aspect of humanity

மார்க்சியம் வர்க்கம் என்பதின் மீது தீரா தாகத்துடன் இருக்கிறது. அவர் புரிந்து பேசிய தொழிலாளி வர்க்கம் காணாமல் போய்விட்டது. நாம் வாழும் உலகில் வர்க்கம் பொருட்டே அல்ல. Marxism obsession with class- fond hope of working class usher socialism disappeared- we live in a social world where class matters less and less

மார்க்சியம் வன்முறை அரசியல் வழியை போதிக்கிறது. சிறு புரட்சிகர குழுவின் ஆயுதப்போராட்டம் மூலம் ஆட்சி- பெரும்பான்மை மக்களை கட்டுப்படுத்த விழைகிறது. எனவே அதற்கு ஜனநாயகத்துடன் பொருந்த முடியாது. Marxists advocate violent political action. A small band of insurrectionists rise up, overthrow state and impose its will on the majority. Marxism and democracy are daggers drawn.

மார்க்சியம் ஆக உயர் அதிகார அரசை கட்டமைக்க விழைகிறது. அது கொடுங்கோன்மைக்கு இட்டுச் செல்கிறது. தனிநபர் சுதந்திரம் என்பதை இல்லாமல் ஆக்குகிறது. மக்களுக்காக கட்சி அதிகாரத்தை எடுத்துக்கொள்ளும். கட்சிக்காக அரசு எடுத்துக்கொள்ளும். அரசுக்காக தனி ஏக அதிகாரம் கொண்டவர் வருவார். Marxism believes in all powerful state- by means of despotic power. People will give way to party- party to state and state to monstrous dictator- power will put an end to individual freedom.

சமூகம் பழைய வர்க்கப்போராட்டம் என்பதிலிருந்து மார்க்சியம் தாண்டிய புதுவகை தீவிர போராட்டங்களை கண்டு வருகிறது. அவை மார்க்சியத்தை பின்னுக்கு தள்ளிவிட்டுவிட்டன. Radical movements sprung up from outside Marxism- from an antiquated class struggle forms to new forms of political activism- left marxism well behind.

டெரி ஈகிள்டன் அடுக்கிக்கொண்டு விவாதித்துள்ள 10 முக்கிய விமர்சனங்கள் மேலே குறிப்பிட்டவை. தனது why Marx was right 240 பக்க அளவிலான நூலில் , தான் தேடி உணர்ந்த பதில்களை மிகவும் கோர்வையாக , எதார்த்தம் சிதறாமல், மேற்கோள்களுக்குள் அதிகம் அடைந்துவிடாமல், கற்பனைகள் கலக்காமல் தர முயற்சித்துள்ளார்.

வாய்ப்புள்ளோர் வாசித்து பார்க்கலாம். மார்க்சிய கிடங்கிற்கு தேவைப்படும் நூல்களில் ஒன்றை ஈகிள்டன் கொடுத்துள்ளார் என்றே எனக்குத் தோன்றுகிறது.

22-6-2024

june 23

Standing before Mirror

I am just using my time in reading and writing and this does not amount to claim that I am an intellectual in its fine sense or an organic writer in Gramscian sense.

I am not a thinker also, but I use my thinking faculty to reason out and to understand men and matters - isms and movements, politics and other societal issues.

In today's context, I am not a foot soldier of my yester years movements. I am neither a revolutionary in its great sense or reactionary in its worse sense.

I did a lot of compromises in the course of my life time, out of some bonds, or some consideration or due to some respects or by mistaken actions and ideas. Sometimes I was dogmatic , sometimes very liberal in taking things. I was good to some and satan to some others.

I differed from some comrades due to their perceptions and attitudes, and some also did not accept me and differed on their own understanding . I differ but never hate anyone , though difficult to love some of them.

People enjoy and satisfy by giving somethings to others- food, cloths or some materials, even rupees. These are all visible mostly. I have chosen another path of getting satisfaction by sharing what I feel through my mental work process. I share what I read in a tiny area or smaller space. Some accepts and some rejects them. This aspect is visible and invisible also. This does not mean I am not spending money at all.

Though critical of the so called bourgeoisie capitalist State/ Govt, they are allowing people like me free in the name of democracy, but cripple us down once they feel dangerous . It seems that people like me are not dangerous.

In the course of life time, one should halt then and there and introspect to some extent at least.

Already History is loaded heavily, it is difficult to book pages for everyone.

Mirror is there, but one should stand before it to get reflected.

23-6-2024

june 24

New E book

புதிய மின் புத்தகம்

சாதி எனும் பிசாசு

(சாதி குறித்த பன்முகக் குரல்கள்)

முன்னீடு

சாதி குறித்து வாசித்தல் வழி எழுதிய 21 கட்டுரைகள் இத்தொகுப்பில் இடம் பெற்றுள்ளன. பிரிட்டிஷ் நாடாளுமன்ற ஆவணம் ஒன்றும் தரப்பட்டுள்ளது. கடந்த 5 ஆண்டுகளில் இணையத்திலும், முகநூலிலும் அறிமுகப்படுத்திய கட்டுரைகள் இவை. பல்வேறு அறிஞர்கள் தங்கள் ஆய்வின் மூலம் தந்த சில புரிதல்களை இத்தொகுப்பை படிப்போர் உணரமுடியும். அவரவர் சாய்வுக் கோணத்தில் அவர்களது எடுத்து வைப்புகள் அமைந்திருக்கும்.

எவரும் சாதி குறித்த முழுமையை தந்துவிடமுடியாது. ஆங்காங்கே கிடைக்கும் perceptions, உரிமைகோரல்களை, மேலேறுதல் என்கிற தவிப்பின் போராட்டங்களை உணர்த்துதல் என்கிற அளவில் அவற்றை நாம் புரிந்துகொள்ளமுடியும்.

சாதிப்பற்று - caste patriotism அரசியலில், பொருளாதாரத்தில், சமூக நடவடிக்கைகளில் ஏதோவொருவகையில் முகம் காட்டாமல் இல்லை. ஓட்டரசியல் இதற்கான நல்ல விளைநிலமாகவும் மாறியுள்ளது.

சாதிக்கு அப்பாற்பட்டு வர்க்கமாக மக்களை திரளச் செய்தல்- உணரவைத்தல் என்பதில் இடது அரசியல் வெற்றியை பெறமுடியாமல் போயுள்ளது. வர்க்கத்தில் சாதியும், சாதிக்குள் வர்க்கமும் இருப்பதை உணர்ந்த போராட்டம் தேவை என அவர்கள் கருதத்துவங்கியுள்ளனர்.

பிராமணர் அல்லாதார் இயக்கம் என்கிற வகையில் இடைநிலை சாதிகளின் caste Hindus கூட்டமைப்பாக திராவிட இயக்கம் வெற்றி பெற்றுள்ளது. 'ஆர்யருக்கு/ பார்ப்பனர்க்கு எதிர் திராவிட பெருமிதம்' என்பதில் அதன் வெற்றியை நன்றாக உணரமுடியும். சுயசாதி உணர்வுகளுக்கு மேலாக ஒற்றை திராவிட இனப் பெருமிதம் என்பதில் அதனால் வெற்றி பெற முடிந்ததா என்பது சிந்திக்கப்பட வேண்டிய கேள்வி. அவ்வுணர்வு கருத்தியல் உணர்வாகவும், சுய சாதி உணர்வு மனரீதியான உணர்வாகவும் இருப்பதைக் காணமுடிகிறது.

அம்பேத்கரியர்களாலும் தங்களின் முன்னேற்ற empowerment agenda தாண்டி, சாதி ஒழிப்பு என்பதில் எதையும் செய்யமுடியவில்லை. பிராமண கருத்தியல் எதிர்ப்பில்

இடைச்சாதிகளுடன் கூட்டணியும், சொந்த empowerment க்கான போராட்டங்களில் அவர்களுடனான முரணும் இருப்பதைக் காணமுடியும்.

திராவிடமா தமிழ் இன தேச உணர்வா என்கிற போராட்டம் ஓரளவிற்கு நடந்து வருகிறது. தமிழ் இன தேசப் பற்றாளர்களும் அதை சாதி உணர்விற்கு மேல் ஒன்றாக தமிழன் என்ற ஒற்றைக்கட்டாக உருவாக்க முடியவில்லை.

இந்து என்கிற ஒற்றை அடையாளத்தில் சாதியை தாண்டி திரளச் செய்தல் என்பதில் அரசியல் வெற்றி வலதிற்கு கிடைத்திருந்தாலும், சாதிய உணர்வுகளுக்கு மேல் இந்து பெருமிதம் என்பதை அவர்களாலும் கொணரமுடியவில்லை. 'முஸ்லீம் எதிர் இந்து பெருமிதம்' என்கிற வெற்றி அளவிற்கு 'சாதிக்கு மேம்பட்ட இந்து பெருமிதம்' என்பதை வலது அரசியலால் கொணர முடியவில்லை. அதனால் 'பிராமண கருத்தியல் மேலாண்மை' என்கிற குற்றச்சாட்டை உடைக்க முடியவில்லை. இந்துக்களில் 'சாதி சமத்துவம்' என்பதற்கே தாங்கள் நிற்கிறோம் என்கிற நம்பிக்கையை உருவாக்க இயலவில்லை. அவர்களின் இருப்பிற்கான பெரும் போராட்டமது.

சமூகத்தின் அரசியல் பொருளாதார அந்தஸ்து காரணியாக சாதி இன்னும் தன் இடத்தை பெரிதாக வைத்துக்கொண்டிருக்கிறது. இந்தியாவில் அனைத்தும் சாதிவழியில் தீர்வைக் கோருகிறது என்கிற பேச்சும் பெரிதாக செயல்படுகிறது. 'Brahminical Ideology -Brahminical Kshatria execution' என்பதிலிருந்து சாதி 'Brahminical Ideology - execution mostly by all castes' என்கிற அரசியல் அதிகார சுற்றிற்கு சென்றுவிட்டது. சாதிய ஏற்றத்தாழ்வுகள் பிறப்பின் அடிப்படையில் என்கிற பிராம்மண கருத்தியலின் செயல் வாகனங்களாக அனைத்து சாதிகளும் ஆகியுள்ளன. எனக்கு மேல் எந்த சாதியும் இல்லை- கீழும் எந்த சாதியும் இல்லை- அனைத்து சாதிகளும் சமம் என்கிற உளவியல் அநேகமாக இல்லை எனலாம். சாதி ஒழிப்பு என்பது நல்லெண்ண முழக்கமாக இருக்கிறது. caste Patriotism என்கிற சாதிபக்த உணர்வு நகர்ப்புறங்களிலும், மேற்கு நாடுகளில் குடியேறுபவர்களிடமும் கூட குறையவில்லை. சாதிப்பகைகள் திருமண பந்தம் என்கிற அம்சத்தில் அதன் உஷ்ணத்தைக் காட்டுகின்றன.

சாதியும் தன்னளவில் அப்படியே தேங்கி நின்றுவிடவில்லை. ஆங்காங்கே சலனங்கள் அசைவுகள் தென்படாமல் இல்லை. தன் இறுக்கத்தை பொதுவெளிகளில் குறைத்துக்கொண்டும், உள்ளிடங்களில் அதன் இருப்பை வைத்துக்கொண்டும் சாதி சமூகம் திருமணம் மற்றும் சடங்குகளின் வழி வாழ்ந்துகொண்டு இருக்கிறது. பொது வெளி மதிப்புகள் கூடி , உள்ளிட ஆசாரங்கள் மதிப்பிழத்தல், திருமணத்திற்கு 'சாதி பிரதான அடிப்படை காரணி' என்பது பலமிழத்தல் என்கிற காலவெளியில் அதன் வீச்சு இற்றுப்போகலாம். குடும்ப உடைவுகள் சமூக மீறல்கள் என்கிற போராட்டங்கள் வலுப்பெறும்போது மீத மிச்ச

எச்ச சாயல்கள் என அது ஓயலாம். அடையாளப் போராட்டங்கள் எவ்வழியில் சமூகத்தை அழைத்துப் போகுமோ ..ஊகிக்கமுடியவில்லை.

இந்த நூலில் தொகுக்கப்பட்டவை பல்வேறு ஆய்வாளர்களின் பன்முகக் குரலை எதிரொலிக்கின்றன. அவற்றில் அரசியல் பாசம் ஏதும் இல்லை எனச் சொல்லமுடியாது என்றே கருதுகிறேன். சாதி குறித்து ஏராள ஆய்வுகள் இருக்கின்ற சூழலில், சிலவற்றை ஒருசேர இங்கு அறிமுகம் என்கிற அளவில் வாசகர் பார்க்க முடியும். மேலும் ஆர்வம் ஏற்பட்டால் தேடிச் செல்ல முடியும். வாசகர் எவருக்காவது பயனளித்தால், இத்தொகுப்பு அதன் முக்தியைப் பெறும்.

சென்னை

22-6-2024 - ஆர் பட்டாபிராமன்

உள்ளே...

17. மாட்டிறைச்சி பொருளாதாரம் அரசியல்

18. தமிழகத்தில் தொழில் வளர்ச்சி உழைப்பாளர் சாதி

19. தமிழகத்தில் அடிமை வியாபாரம்

20. தமிழகத்தில் சாதி உருவாக்கமும் சமூக மாற்றமும்

21. இந்தியாவில் உற்பத்தி உறவுகளின் மாற்றம்

22. கில்பர்ட் சிலேட்டரின் திராவிடர்

பார்க்க படிக்க சொடுக்கவும்

IA800406.US.ARCHIVE.ORG

ia800406.us.archive.org

june 25

ஜே சி குமரப்பாவின் எழுத்துக்கள் ஏராளம் இருக்கின்றன. காந்திய பொருளாதாரம் என்கிற சிறப்பு குறித்து அவர் ஏராளம் எழுதி அடுத்த தலைமுறைகள் அறிந்திட விட்டுச் சென்றுள்ளார். குமரப்பா வாசிப்பு என்பதற்கு பல மணி நேர உழைப்பு தேவைப்படும்.

குமரப்பா பற்றிய நூல்களும் நிறைய வந்திருக்கின்றன. அப்படி ஒரு நூல், ஆழமாக அவரை விவாதிக்கின்ற நூலை மும்பாய் பெண்கள் பல்கலைக்கழக பேராசிரியை சைத்ரா ரெட்கர் ( Chaitra Redkar ) எழுதியுள்ளார். சைத்ரா ரெட்கர் இந்நூலிற்கான பெரும் உழைப்பை தந்துள்ளதை, நூலை படிக்கக்கூடிய எவரும் உணரமுடியும். Sage வெளியீடு என்றாலே அதில் விவர கருத்தாக்க ஆழம் இருக்கும். விலையும் கூட இருக்கும். இந்த 200 பக்க நூல் ரூ 800க்கு போட்டுள்ளனர்.

விடுதலை இந்தியாவின் பொருளாதார கட்டுமானம் ஏராள விவாதங்களை a lot of interplay narratives கொண்டது. பேரா சைத்ரா அவர்கள் மிகப் பொறுப்பாக இந்த உரையாடல்களை இந்நூலில் வைத்து , குமரப்பாவின் வழி காந்திய பொருளாதார சிந்தனை செயல்பாட்டின் மூலம் மீட்சி என்பதை நகர்த்துகிறார்.

இந்நூலில் பக்கந்தோறும் பன்முக விவாதங்கள் வழிகின்றன.

நூலின் பெயரை சொல்லாமலே போனால் எப்படி? Gandhian Engagement with Capital perspectives of J C Kumarappa.

1937 முதலே, நேதாஜி காங் தலைவராக இருக்கும்போது அமைக்கப்பட்ட தேசிய திட்டக்குழுவில் பெரும் தலைகள் கருத்து மோதலை செய்துகொண்டனர். பெரும் தொழில் அதிபர்கள் பம்பாய் திட்டம், எம் என் ராய் உள்ளிட்டோர் மக்கள் திட்டம், நாராயண் அகர்வாலின் காந்திய திட்டம், குமரப்பாவின் மக்களால் மக்களுக்கான திட்டம் என பல்வேறு குறிப்புகள் விடுதலை நெருக்கத்தில் விவாத அரங்கில் இருந்தன.

நேரு போன்றவர்கள் வறுமை ஒழிப்பை, உற்பத்தி பெருக்கத்தை பெருந்தொழில்கள், தொழில்மயமாக்கல் மூலம் என்பதில் உறுதியாக இருந்தனர். குமரப்பாவால் நேரு கமிட்டியில் தொடரமுடியவில்லை. அவர் தன் கருத்துக்களை கிராம உத்யோக் மற்றும் ஹரிஜன் இதழ்கள் வழி சொல்லி வரலானார்.

இந்த நூலில் எதை எடுத்துக்காட்டுவது எதை விடுவது- முழுமையான விவாதக்களமாக இருக்கும் நூலாக இருக்கிறதே? சாரமாக சொல்ல முயற்சிக்கிறேன். நாராயண் தேசாய் சொல்வார் ..ஆசிரம வாழ்க்கையில் காந்தி அமர்ந்து ஏராளமானவர்களை சந்திக்கும் அறையில் இந்த வாசகம் இருக்குமாம். Be

quick Be Brief Be Gone. எப்படி முரட்டு வரவேற்பு பார்த்தீர்களா என தேசாய் சொல்வார். அப்படி brief ஆக சில வரிகள்..

இந்தியாவில் பெரும் தொழில்கள் வர்க்க பிரிவினையை அதிகப்படுத்தும். இலாபத்தை சிலர் கையில் குவித்து அசமத்துவத்தை பெருகச் செய்யும். வேலயின்மையை நிரந்தரமாக்கும்.

விடுதலை இந்தியா செல்ல வேண்டிய பாதை - critique of capitalism with moral intertwined with material- முதலாளித்துவ மற்ற வளர்ச்சி - developing non mechanised non capitalist model of village centric industrialisation and economy

Village entered economy of permanence- a polity that facilitate this decentralisation of economy

Growth versus employment என்கிற விவாதத்தில் அதை இருமையாக்காமல் ஒன்றால் ஒன்று தாழாமல் வேலையின்மை உருவாக்காத வளர்ச்சி - primacy to employment generation without halting growth

குமரப்பா எழுதுவது

..wealth is usually produced by intelligent use of the means of production and the application or employment of human talent or power. Planning in the first instance , consists in rational coordination of these three factors - mathematically W = E + M, W stands for wealth, E employment of human talent, M tools equipment or capital. In planning our first step will have to be the ascertaining of the availability of E and M .

Planning must encourage such economic activities which will make maximum utilisation of the human labour. Capital intensive industrialisation will ultimately promote imperialism and not a socialistic pattern of society

Kumarappa locates the root cause of inequality, poverty and unemployment in money economy and mechanised industrialism. Kumarappa visualises a symbiotic relation between money economy and imperialism

இந்நூலில் மய்யமாக ஆசிரியர் வரும் இடமாக இந்த வரிகளைக் காணலாம்.

Kumarappa’s critique of colonialism, money economy and mechanised industrialism provides an alternate perspective to understand Gandhian engagement with Capital.

Denying work meant denial of humanity. Work is practical side of religion. Economically, the unemployed are like untouchables

குமரப்பா இந்த முக்கிய கேள்வியை பதில் தேட எழுப்பினார்

Are we substituting brown capitalism for the white variety?

june 26

கள்ளக்குறிச்சி சம்பவம் ஒன்றை அவசரப்படுத்துவதாக , உணர்த்துவதாக இருக்கிறது.

முன்னரான சென்னை ராஜதானி , பின்னர் தமிழகம் ஆண்டவர்கள், அது ராஜாஜியோ, காமராஜரோ, அண்ணாவோ, கலைஞரோ, எம்ஜிஆர் அவர்களோ, ஜெயலலிதா அம்மையாரோ, எடப்பாடியாரோ, தற்போதைய ஸ்டாலினாரோ - இந்த ஆட்சிகள் காமராஜர் ஆட்சி என்றாலும்- திராவிட மாடல் ஆட்சி என்றாலும் தமிழகம் வளர்ச்சி அடைந்த மாநிலங்களில் ஒன்று என்கிற பொதுப் புத்தியை உருவாக்கியுள்ளன.

தேவையெல்லாம் இந்த வளர்ச்சியின் பலன்கள் எவ்வாறு பகிர்ந்தளிக்கப்பட்டுள்ளது- அதில் distributive justice quotient / sharing என்ன- பலன்கள் எங்கே குவிந்து கிடக்கிறது- வளர்ச்சி என்கிற வரையறையில் பலன்கள் எவரிடம் முழுமையாக அல்லது அரைகுறையாக போய் சேர்ந்துள்ளது என்கிற கேள்விகளுக்கான வெள்ளை பதில்கள்.

வளர்ச்சியின் பலனை நுகரவேண்டிய அந்த ஓரப்பகுதி கோடிக்கணக்கான மக்கள் பிரிவினர் எவர்- அவரின் வர்க்கப்பாடு- சாதி தன்மைகள் எவை என்பதற்கான வெள்ளை அறிக்கை ஒன்றை வெளியிட ஆட்சியாளர் முன்வரவேண்டும்.

தமிழகத்தின் பின்னடைந்த மாவட்டங்கள் per capita income குடும்பவாரியாக வெளித்தெரிய வைத்து , முன்னேற்றத்திற்கான திட்டங்கள் குறித்த செயல்திட்ட அறிவிப்பு தேவைப்படுகிறது.

கிராமங்கள் வளர்ச்சி குறியீடு village development index மாவட்டவாரியாக - சில அடிப்படைகளை வைத்து வெளியிட வேண்டும். கூலி பொருளாதார குடும்பங்களின் அடிப்படை பொருளாதார நிலைகளை குறித்த டேட்டாக்கள் பொதுவெளி விவாதமாக வேண்டும். VDP village gross Domestic product என கிராம உற்பத்தி கணக்கீடு எடுக்கப்படவேண்டும். உற்பத்தியே இல்லா கிராமங்கள் என எவையாவது இருக்கிறதா எனப் பார்க்க வேண்டும். சமவெளி, கடலோர , மலை கிராமங்கள் என புவிக்கேற்ற ஒப்பீட்டு விவரங்கள் எடுக்கப்படவேண்டும்.

உடல் உழைப்பைத் தரும் அன்றாட கூலி வாழ்க்கையினருக்கான கலாச்சார தேவைகள் ( இலவச டிவி தாண்டி) குறித்த செயல் திட்டம் கொணர சிறப்பு கவனம் தேவைப்படுகிறது. அவர்களின் கலை , விளையாட்டு மற்றும் பிற திறமைகளுக்கான மய்யங்கள் உருவாதல் நலம்.

அரசாங்க அதிகாரிகள், காவல் துறையினர், மருத்துவ துறையினர், பஞ்சாயத்து அரசியல் தலைவர்களுக்கு ( இன்னும் சம்பந்தப்பட்ட எவருக்கும்) village sensitisation

awareness கட்டாயமாக்கப்படுதல் நல்லது. தமிழகத்தில் உழைப்பை செலுத்தி அன்றாட வருவாய் மூலம் வாழக்கூடிய எவருக்கும் human dignity பாதிப்பு இருக்காது என்கிற நிலை குறித்த விழிப்புணர்வு உருவாகவேண்டும்.

சாதிவாரி கணக்கெடுப்பு அளவிற்கு முக்கியமானது வேலைவாரி உழைப்புவாரி கணக்கெடுப்பும், வருவாய்வாரி கணக்கெடுப்பும், சொத்து குறித்த கணக்கெடுப்பும். ஏய்ப்பில்லா நம்பத்தகுந்த இக்கணக்கெடுப்புகள் தமிழக வளர்ச்சி map யை தெளிவாகக் காட்டும். அதன் சாதித் தன்மையும் வர்க்கத்தன்மையும் புலப்படும். Inequality graph கிடைக்கும். செயல்திட்டம் என்ன என்பதை புலப்படுத்தும்.

26-6-2024

june 27

1818ல் பிறந்த கார்ல் மார்க்ஸ் தனது 30 வயதில் புகழ் வாய்ந்த, இன்றும் 175 ஆண்டுகள் ஆன பின்னரும் விவாதிக்கப்படக்கூடிய ஒன்றான கம்யூனிஸ்ட் அறிக்கையை எழுதினார்.

இந்த 30 வயதிற்குள் அவர் பத்திரிகை ஆசிரியராக, பெரும் விவாதக்காரராக, நூலாசிரியாக மிளிர்ந்தார். அவர் இளம் மார்க்ஸ் என்கிற வகையில் எழுதிய அனைத்து நூல்களும் இன்றும் மார்க்சியர் வட்டாரத்தில் பேசு பொருளாக, புரிதலைத் தேடக்கூடியனவாகவே இருக்கின்றன.

1843ல் காதலித்து காக்க வைத்த ஜென்னியை மணமுடித்த ஆண்டு. தேனிலவிற்கும் பெட்டி புத்தகங்களுடன், குறிப்பு நோட்டுகளுடன் சென்றவர். அந்த ஆண்டில் அவர் எழுதியவை தான் critique of Hegel's philosophy of Right, on the Jewish question.

1844ல் எங்கெல்ஸ் தொடர்பில் அறிமுகத்தில் எங்கெல்ஸ் குறிப்பாக எழுதிய outlines of a Critique of political economy தொடர்ந்து மார்க்ஸ் Economic and Philosophical Manuscripts எழுதினார்.

1845ல் பாரிஸ் அகதி வாழ்க்கை வெளியேற்றப்பட்டு, பிரஸ்ஸல்ஸ் வாழ்க்கை. லண்டன் பயணம். இந்த ஆண்டில் Theses on Feuerbach, The Holy Family ஆகிய ஆக்கங்களை கொடுத்தார்.

1846ல் ஓராண்டிற்கு மேல் உழைத்து எங்கெல்ஸ் உடன் The German Ideology யை அவர் கொடுத்தார்.

1847ல் புகழ் வாய்ந்த பிரஞ்சு அனார்க்கிஸ்ட் புருதான் எழுதிய The Philosophy of Poverty யுடன் விவாதம் செய்கிற வகையில் The poverty philosophy என்பதை எழுதினார்.

1848ல் அனைவராலும் அறியப்பட்ட communist Manifesto எழுதினார்.

1850ல் The class Struggles in France வந்தது

1852ல் The Eighteenth Brumaire of Louis Bonaparte, 1853 About Cologne Communist Trail

இந்த ஆண்டுகளுக்கு பின்னர் அவர் ஏராளம் பத்திரிகை கட்டுரைகளை எழுதலானார்.

1859ல் A contribution to the Critique of Political Economy எழுதினார்

1865ல் wages, price , profit வந்தது. பிரஸ்ஸல்ஸ் ஜெர்மன் தொழிலாளர்களுக்கு அவர் முன்பு எடுத்த வகுப்புகளின் குறிப்புகள் நூலாகி வந்தது.

1867 ல் அவரின் வாழ்நாள் உழைப்பின் பிழிவாக capital vol 1 பெரும் போராட்டத்திற்கு இடையே வந்தது.

1871ல் The Paris commune Civil war in France

1875ல் The critique of Gotha Programme

1883 மார்ச்சில் மார்க்ஸ் மரணித்தார்.

இந்த நூல்களையெல்லாம், குறிப்புகள் போல டேவிட் மக்லெல்லன் தனது The Thought of Karl Marx நூலில் கொணர்ந்திருப்பார்.

சில முக்கிய நூல்கள் மட்டுமே மார்க்சின் எழுத்துக்களில் இங்கு சொல்லப்பட்டுள்ளன. அவரது நூல்கள், கடிதங்கள், பத்திரிகை எழுத்துக்கள் என ஏராள தொகுப்புகள் பல்லாயிரக் கணக்கான பக்கங்களில் ஆங்கிலத்திலும், ஏன் தமிழிலும் கூட நமக்கு கிடைக்கின்றன.

மார்க்ஸ் எழுதியவை, மார்க்ஸ் மார்க்சிசம் பற்றியவை, விமர்சன எழுத்துக்கள் எனப் பார்த்தால் இலட்சம் பக்கங்களை விஞ்சலாம். எவருக்கும் வாழ் நாள் போதாது. கொண்டாடக் கூடியவர்களுக்கான எழுத்துக்கள் என்றும், விமர்சிப்பவர்க்கான எழுத்துக்கள் என்றும் மார்க்ஸ் தன்னை வைத்துக்கொண்டிருக்கிறார்.

காந்தியர் போலவே மார்க்சியரும் , மார்க்சியத்தை guide to action, not a dogma என்றே சொல்வர். ஆனால் லெனின் அதில் vanguardism தன்மையை ஏற்றினார் என அகில் பில்கிராமி போன்ற சிந்தனையாளர் சொல்வர். காந்தியிடம் exemplariness தன்மை இருக்கும். வேன்கார்டிசம் இருக்காது.

27-6-2024

மார்க்ஸ் ஏன் சரியானவர் என்கிற why Marx was right? டெரி ஈகிள்டன் நூலை அறிமுகப்படுத்தி முன்னர் ஒரு போஸ்ட் செய்திருந்தேன். அதில் மார்க்ஸ், மார்க்சிசம் குறித்த 10 பெரும் விமர்சனங்களை அவர் எவ்வாறு தொகுத்துக்கொண்டு, தன் புரிதலை நூலில் தந்தார் என்பதை சற்று தொட்டுக்காட்டியிருந்தேன்.

இந்த இடுகையில், டெரி மார்க்சை மார்க்சியத்தை எப்படி புரிந்து கொண்டுள்ளார் என்பதற்கான, சில மாதிரிகளை , அவரது மொழியில் கீழே அடுக்கியுள்ளேன். மார்க்ஸ் குறித்து புரிந்துகொள்ளவும், விமர்சிக்கவும் கூட கடுமையான உழைப்பு தேவைப்படும். ஒருவர் பேசுகிற, எழுதுகிற அம்சத்தை பார்க்கையில் அவர் உழைப்பு குறித்த புரிதலும் நமக்கு கூடவே கிட்டும்.

புரிதலோ, விமர்சனமோ அது ஆழமானதாக, பெரும் தேடல் தவிப்பின் பாற்பட்ட உழைப்பு வழி கிட்டும்போது , அவற்றை பொருட்படுத்தி பார்க்க வேண்டும். ஈகிள்டன் அப்படியான உழைப்பை இந்நூலில் செய்திருப்பார். ஏற்கலாம், மறுக்கலாம்- அது அவரவர் கொண்டிருக்கக்கூடிய நேர்மையான பயிற்சி சார்ந்த ஒன்று. இனி ஈகிள்டன் புரிதலிலிருந்து... நிதானமாக வாசிக்கும்போது, ஈகிள்டன் நல்ல விவாதத்தை தருகிறார் என புரிந்துகொள்ளலாம்.

Marxism is a critique of capitalism

Capitalism has brought about great material advances. But why do we continue to indulge the myth that the fabulous wealth generated by this mode of production will in the fullness of time become available to all?

Ideally socialism requires a skilled educated political populace, civic institutions, enlightened liberal traditions and the habit of democracy.

Socialists will no doubt continue to argue about the detail of a post capitalist economy. There is no flawless model currently on offer.

Two major doctrines lie at the heart of Marx's thought. The primary role played by the economic in social life, the other is the idea of succession of modes of production.

Marx is using history in the sense of significant course of events, not as synonym for the whole of human existence to date. Marx believes that the productive forces have a tendency to develop as history unfolds. This is not to claim they progress all the time. History is not at all a tale of progress.

Marx clearly thinks that material wealth can damage our moral health.

Productive forces and productive relations do not dance harmoniously hand in hand throughout history. Historical determinism is a recipe for political quietism. Marx does not think that the inevitability of socialism means we can all stay in bed.

Class comes over whenever material production is so organised as to compel transfer of surplus labour to others in order to survive.

Marx wrote so : History does nothing, it possesses no immense wealth, it wages no battles. It is man , the living real man who does all that..history is nothing but the activity of man pursuing his aims.

Marx was a prophet not a fortune teller. The idea that history is moving onwards and upwards to a state of perfection is not a leftist one.

The future is open, but it is not totally open. Nature does not guarantee that socialism will follow on the heels of capitalism. There are many different futures implicit in the present..socialism represents in one sense of break from the present. Realism and vision go hand in hand.

To see a relationship as exploitive, you need to have some idea of what a non exploitative relationship would look like. Ideals are signposts, not tangible entities. They point us the way to go.

Communism would not spell the end of human strife..envy, domination, possessiveness, competition would still exist. So Marxism holds out no promise of human perfection.

The aims of Marxism is just not just material. Materialists are not those who deny the spiritual, but those who remind us that spiritual fulfilment requires certain material conditions

Marx was a sworn enemy of uniformity. Neither it is possible to have a social order in which everyone is equal. Genuine equality means not treating everyone the same, but attending equally to everyone's different needs. In Marx's view, socialism is pluralistic order.

Marx wrote so in German Ideology: "The class that is ruling material force of society is at the same time the ruling intellectual force" . Only through the collective practical activity of the majority people can the ideas which govern ourselves be really changed.

The claim that everything for Marx is determined by economics is an absurd oversimplification. Classes truly become classes when they become conscious of themselves as such. The prejudice that thought is independent of reality is itself shaped by social reality.

Practice is clearly a material affair, but it is also, inseparably, a matter of meanings, values, purposes and intentions. Human consciousness requires a great deal of material stage setting. Marx thought that those who controlled material production tended to control mental production as well.

Marxism is not a theory of everything.

Class is a question where you stand in the mode of production- what you are doing. Class changes its composition all the time. The working class does not cease to interest Marxists the moment it

acquires colour TV etc. it is its place within capitalist mode of production which is most decisive. The working class includes all those selling their labour power to capital.

For Marxism, a revolution is not characterised by how much violence it involves. Revolutions are usually a long time in the brewing. You can socialise industry by Govt order, but legislation alone cannot produce men and women who feel different from their grandparents. That involves healthy lengthy process of education and cultural change.

Revolution cannot be handed down to you by a tight knit vanguard of conspirators. Nor do revolutionaries reject parliamentary democracy. What Marx rejected was the sentimental myth of the State as a source of harmony uniting different groups. The State Marx approved of was the rule of citizens of themselves, not a minority over a majority.

Marx's critique of capitalist economy is closely bound up with the concern for Nature. Human beings for Marx is part of Nature yet able to stand over against it. He dreams also of an ultimate unity between Nature and humanity.

டெரி அவர்களின் 250 பக்க விரிவான ஆய்வில் ஆங்காங்கே நான் பறித்துப் போட்ட வரிகள் மேலே. குறுக்கு வெட்டு புரிதலை அவை தரலாம். டெரி போல ஏராள மார்க்சிய எழுத்துக்கள் கொட்டிக்கிடக்கின்றன. தாகம் உள்ளவர் தணித்துக்கொள்ளலாம்.

28-6-2024

July 30

நாகூர் ரூமியின் திராட்சைகளின் இதயத்தில் சுரந்தவை

நீங்கள் சாக்கடையில் பார்த்துக்கொண்டிருப்பது நிலவல்ல, நிலவு அதோ அங்கே வானத்தில்…

நாடறிந்த எழுத்தாளர்ன்னா…நாட்டுக்கு அவரைத் தெரியணும்னு அவசியமில்லே..இவருக்கு நாட்டைத் தெரிஞ்சா போதுமில்ல, அப்பவும் நாடறிஞ்ச எழுத்தாளர்தானே

அது ஒன்னுமில்ல குலாமு, மன்சூர் அல்லாஜூன்டு ஒரு சூ்ஃபி இருந்தாஹ. அவுஹ ஒரு நாள் திக்ர் ( இறைதியானம்) செய்யும்போது அன்தல் ஹக் அன்தல் ஹக்குன்டு திக்ர் செய்வதற்கு பதிலாக, அனல் ஹக்குன்டு செஞ்சாஹ. அன்தல் ஹக்குன்டு எனில் நீதான் ஆண்டவன்டு அர்த்தம். அனல் ஹக்குன்டு எனில் நான்தான் ஆண்டவன்டு அர்த்தம். அதை அவஹ வேணும்னே சொல்லலை. வேற நிலையிலே சொன்னது.

கேள்வி கேக்குறது ரொம்ப சுலபம். கொடுக்கிற பதில வாங்கிக்கிற பக்குவம் எல்லாருக்கும் கெடையாது.

அது என்ன ஸயிண்ட்டிஃபிக்கான்னு? எந்த ஸயின்ஸ்..ஈ இஸ் ஈகொல்டு எம்சி ஸ்கொயர் சொன்னதா, குவாண்டம் தியரியா, ஐன்ஸ்டின் ஸயன்சா, அவன் தப்புனு சொன்னதா..மாறிகிட்டே இருக்கிற ஸயின்சா..மாறா ஸயின்சா எந்த ஸயின்ஸ்?

சிக்கல் வரும்போது மனம் திரள்வது இயற்கை. சிக்கல் வராம் இருக்கும்போதே உங்களுக்கு தெரளுனும். இதுக்கு சூஃ பியாக்களுவ பயிற்சி கொடுத்தாங்க. Mind wandering நு பேரு

ஆர்க்கிடைப்புங்குறது ஒரு பேங்க் மாதிரி . சமுதாயத்துல உள்ளவனெல்லாம் ஒரே மாதிரி சிந்திச்சு சிந்திச்சு, அந்த சிந்தனை சக்தி எல்லாம் பேங்க் அக்கவுண்ட் மாதிரி தெரண்டு இருக்கும். நம்ம சிந்தனய கட்டுப்படுத்தும். அந்த ஆர்க்கிடைப்புக்கு அடிமையாத்தான் சாதாரண மனுசன் இரிக்கிறான்..

திருப்தி அடையக்கூடாது. சந்தோஷமே வரக்கூடாது. சாதனையிலே சிரிப்புமில்லெ, அழுகையுமில்லெ. நீங்க மனசாட்சியை கொலை செஞ்சிங்க, அது உங்கள விடாது. க்ளோஸ் பண்ணிடும்.

அதிருப்தி ஏற்பட்ட zest இருக்காது. அது இல்லேன்னா எப்படி வாழறது . எனக்கு பத்தாது திருப்தியா வாழலை என்று உணரணும். வாழ்வேன்னு உள்ளம் பேசணும். Inspirational dissatisfaction.

புஸ்தகம் படிக்க கண்ணும் புடிக்க கையும் தேவை. படிக்கிறத வாங்கக்கூடிய மனசு. அவ்வளவுதான். இதெ உட்டுபுட்டு, தொடையை ஆட்டிகிட்டு, வாயை உட்டோ, பேசிகிட்டோ படிச்சா நெர்வ் எனர்ஜி வேஸ்ட். நெர்வ் எனர்ஜி, கரெண்ட் அதான் பிராணன். அதான் ரூஹூ. சும்மா இருந்தாலும் அது தெரண்டு கிட்டே இருக்கும்

இன்பத்தையோ துன்பத்தையோ சுவைக்கக்கூடாது. கோபம் அவசரம் பொறாம மூன்றும் ஹராம் ( கூடாதது) . வாழ்க்கையின் இலட்சியம் தற்காலிகமா எதையும் தீர்ப்பதா இருக்கக்கூடாது. நிரந்தர விஷயமாக இருக்கணும்.

கண் முக்கியம். பொட்டை ஆன்மீகத்தால் பயனில்ல.

ஆச்சர்யபடறத விடு. அது ஹராம். நாமாலும் நமக்கு வெளியே உள்ள பொருளும் ஒன்னுதான். இன்னக்கி சரியா வாழலேனா எதிர்காலம் தெரியாது.

சாவ தள்ளிப் போடுறதுக்கு ஒரு முக்கியமான காரணம் இருக்கணும். சும்மா ஆசைக்காக தள்ளிப் போட முடியாது. வெளங்குச்சா?
ஜம் முங்கறது நம்மை நாமே உத்துப் பார்த்து நம்மோட கொறைகள் என்னன்னு அலசிப் பாக்குற பயிற்சி
நீ நானாக மாறும்வரை என்னை சேர்ந்தவனல்ல
அறிவு மேலே உனக்கு ஒரு அடங்காத ஆசெ இரிக்கிது. ஒன்னட முதல் எதிரியே அறிவுதான் தெரிஞ்சிக்க. இனிமே நீ எந்த புஸ்தகமும் படிக்கக்கூடாது
29-6-2024